உ

குருபரன்றுணை.

# திருச்செந்திலந்தாதி.

இந்நூல்

சம்புலிங்கபுரம்

வீரராகவக் கவிராஜரவர்கள் புத்திரர்

திருவண்ணநாதக்கவிராஜரவர்களால்

இயற்றி

எட்டயபுரஞ் சமஸ்தானம் நடுவிற்பட்டி

நமசிவாயம்பிள்ளை யவர்கள் குமாரர்

ஷெ சமஸ்தானம் கெவுனகிரி டிவிஷன்பேஷ்க்கார்

சனம் ந. முத்துசுவாமிபிள்ளையவர்களால்

சைவப்பிரகாச அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பெற்றன.

௮௱௩-ம்ஞு சித்திரைமீ

இதன் விலை அணா 1

உ

குமரன் துணை.



# திருச்செந்திலந்தாதி.

## காப்பு.

திண்டார்புகழ்திருச்செந்திலந்தாதிச்செழுந்தொடையல்
விண்பாலமரர் சிறை[illegible]வந்தவன் மெய்யடியி[illegible]லை
நண்பாயியற்றிப்புனைந்தேத்தி நாளும்பணிந்திட்டி ளை
கண்பார்த்தருள்தருங் கற்பகம்போலங்கரக்கனி டே.

சீரார்செயந்திப்பதிமேவிவாழுஞ் செழுங்கடப்பந்
தாரார்புயன்றிருக்கைவேலவன்றிகழ்சண்முகன்றன்
பேராயிரத்தெட்டுருவோதியென்றும் பிறங்கடியார்
சாரார்பிறவியிற்சாகாரெனமறை சாற்றிடுமே (1)

சாற்றுமந்தாதிதனைக்கொண்டு நிரனைத்தாரணியி
லேற்றமுண்டாகச்சிறைதவிர்த்தாண்டதையெண்ணிபுன்றன்
பாற்றினஞ்சிந்தைவைத்தேனெனக்கருள்பாலியட
லேற்றினையூர்பரன்பாலா செயந்திக்கிறையவனே (2)

இறையவனுந் தபசேசம்பகர்ந்தனையெண்குநவாய்
மறையவனைச்சிறைநீவைத்துவிட்டனைவானவரைச்
சிறைதவிர்த்திட்டனைநின்செயல்பாவர்தெளியகிற்பார்
நிறைதவர்போற்றிடச்செந்தூரில்மேவியநின்மலனே (3)

மலமூன்றினையுங்கடந்திட்டயோகியர்வானவர்கள்
தலமூன்றிலுந்தமைக்காத்திடுந்தேவனைத்தாமறியார்
நலமூன்றிபதிருச்செந்தூரில்மேவியநாயகமாம்
வலமூன்றியவயிற்கையானையல்லாதுவாழ்த்துதற்கே (4)

தற்கிணைதானுமில்லாதவேல்கொடுதானவரைக்
கற்கிணையானபுயங்கொய்தவாகைபகாரயத்தைப்
பொற்கிணையாமெனல்போலாஞ்செயந்திபுரத்துறையும்
நிற்கிணைதேவரில்யாவரையெனும் நிகழ்த்துவதே (5)

நிகழ்வதெல்லாமுன்திருச்செயலாமென்று நித்தமுஞ்சீர்
புகழ்வதுமுன்திருத்தாள்போற்றி[illegible]சனைசெய்வதுமுள்
மகிழ்வதுமன்னவடியார்குழாத்தொடுமவைகவருள்
நெகிழ்வதொன்றில்லாத்திருச்செந்திலமேவியசெவ்வண்குகனே

...ழமுங்குறியுங்கடந்திட்டநின்னருள்கொண்டடியார்
...ற்குடூறுஞ்செறிகின்றயாக்கையைநீத்தனர்மல்
...டம்பிறமுந்திகழ்பூங்கடம்பணிவானவயிக்
...மன்றுயராதீயருள்வாய்செந்தில்காப்பவனே (7)

காப்பதுநின்கடனல்லாதுமற்றிலைக்கற்பகத்தின்
பூப்புனைகின்றசுரபதியைமுதற்புங்கவர்நின்
காப்பணிந்தாறக்கரத்தையுஞ்சென்மங்கடப்பதற்கு
நாப்படைப்பன்னுவதொன்றுஞ்செந்திற்குநாயகனே (8)

நாயனம்பாலுடன்வைத்தாலுமெச்சிலைநாடியினும்
போயலைகின்றதைநேராகச்செந்தியிற்போற்றுதற்கு
நீயிருந்தும்பலதேவரைநாடிநிதம்பணிந்தேன்
றியலையாயதைநீபொறுத்தாண்டருள்ஷண்முகனே (9)

ஷண்முகநாதன்றிருத்தாள்பணிந்துதனிப்புகழ்ப்
பண்முகமாகத்துதியாதவர்க்குமுன்பார்ப்பதற்குக்
கண்முகமீதிலிருந்தாலுமென்னவின்பெறுமவெம்
புண்முகமீதுற்றதுவாஞ்செயந்தியைப்போற்றுமினே (10)

போற்றப்படும்பொருள்யாவையுமிப்பூமியிற்பொன்றிடுமவ்
தோற்றப்படுமுலகத்தியல்பாமிதுதோற்றியபின்
மாற்றப்படாதுகெடாதெங்குமுள்ளதுவாலுலகில்
லேற்றப்படும்பொருள்செந்தூரில்வாழ்பொருளாய்நின்றனே

மின்னேரிடைமடவார்கண்ணாரும்விரும்பியினி
பொன்னேமரகதமே[illegible]ச்சொல்லிப்புகழ்ந்திடுமீர்
முன்னேவருஞ்சுகம்பின்னே துயரெனமுன்னிவிட்டுப்
பின்னுளிலுஞ்சுகமெய்திடச்செந்திலைப்பாடுமினே (12)

பாடுவதுன்புகழல்லதுவேறிலைப்பற்றுவிட்டு
நாடுவதுன்னருளல்லதுவேறிலைநான்முடியிற்
சூடுவதுன்னிருதாளல்லதுவேறிலைத்தோகைமயில்
விடுறமுன்னைமுழந்தாள்வாய்செயந்திப்பவிப்பனே (13)

விற்பனமாகத் திருச்செந்தில்மேவியவித்தகரிற்
கற்பகநாட்டிற்புகுந்தவராங்கதைக்கண்டிலேது
அற்பமெனப்புங்கவருக்குரைத்தவரோடும்வந்து
பொற்புறவாழ்ந்திடில்யாரோவிதின்புகழ்கூறுவரோ (14)

கூறுமொழிக்குப்பயனுரையாதுளங்கூசிநின்ற
நாறுமலர்த்தவிசோனைச்சிறையிட்டநாளுலகம்
வீறுபெறும்படியாவையுந்தந்தவன்மேன்மையினைத்
தேறுந்திறமுடையாரெவர்செந்தியிற்றேசிகனே (15)

தேசிகனாகத்திருச்செந்தில்மேவியசிற்பரனை
வாசிகங்காயிகமானதமென்னும்வகைகளினா
லேசிற்றேத்திவணங்கித்தியானித்திடாமனமன்
பாசத்திழுக்கவிழுந்தழிவார்கெடுபாதகரே (16)

பாதகஞ்செய்யாதறமேபுரிந்துன்பதாம்புயத்தின்
மீதகம்வைத்துத்தினந்துதித்தேத்திடுமெய்த்தவமே
சாதகமெய்தாதிருத்தற்கருமருந்தாய்த்தமியேன்
பேதகமின்றித்திருச்செந்திலாய்கொளப்பேணுவையே (17)

பேணும்பொருளுனையல்லாதிலைப்பிரபஞ்சமிசை
காணும்பொருள்கெடும்நீயழியாயு[illegible]க்கண்டுகொண்டேன்
சேணின்றமரர்கள்பூமாரிபெய்யச்செயந்தியினில்
ஆணிக்கனகமணிபோற்பிறப்பையறுப்பதற்கே (18)

அறுமீன்றராமுலையுண்டவன்பத்தரையாதரிப்போன்
பிறைசேர்நுதல்வள்ளிதெய்வானைநாயகன்பேதமறக்
குறுமாதவன்றொழமுன்ஞானமீந்தவன்குன்றெறிந்தோன்
மறாமேவகிடவெவனையாட்கொண்டுசெந்தினில்வாழ்பவனே (19)

பவனனனல்புனலாகாயம்பூமிபருதிமதி
நவனியமானனெனுமிருநான்மயமானவனற்
சிவனயன்மால்வினைதானேபுரிகுவன்றேவர்தொழ
வுவமையொன்றில்லாத்திருச்செந்தின்மேவியவுத்தமனே ௨௰

உத்தமனைத்திருச்செந்தூரில்வாழுமொருவனைநந்
தத்தைத்தவிர்க்குந்தனிமருந்தாகியஷண்முகனை
யத்தற்குநாளுபதேசங்களிக்கவளித்தவனைச்
சித்தத்திருத்துமின்பூவிர்நினைந்தவைசித்திக்கவே (21)

சித்திக்குமேபொருளின்பமெய்ப்புண்ணியஞ்சீரகமும்
தித்திக்குமென்கரும்பேயெனத்தேவருஞ்சென்றுதொழ
வெத்திக்கும்போற்றுந்திருச்செந்திலின்கணல்லின்பவள்ளி
யத்திகுமரியுடன்வாழ்குமாரனடியவர்க்கே (22)

அடியார்க்கருண்டிருமால்நிறம்போலுமரும்புயல்காள்
கொடியார்குலக்கட்டறத்திட்டவேலனைக்கூட்டுமின்றேற்
கடியார்செழுங்கடப்பந்தாரைவாங்கிக்கடிதளிமின்
அடியேனுமைப்பணிகின்றேன்படுமென்றுயரறைந்தே (23)

அறைவேனெவர்க்கினியென்செய்குவேனெனையாதரிப்பாய்
குறைவேதிருக்கினுநீ[illegible]ாறுத்தேறுங்கொன்றைதிகழ்
பிறைவேணியன்றரும்பிள்ளாய்விநாயகன்பின்னுதித்த
இறையேசெயுந்திப்பதிமேவிவாழ்கின்றவென்குருவே (24)

குருகார்தடஞ்சுனைசூழுஞ்செயந்திக்குகாவரியின்
மருகாகடம்பணிதோளாயறுமுகவானவநன்
முருகாதிருக்கரவேலாவெனத்தினமுன்னியுவந்
துருகாதிருந்ததென்னெஞ்சியான்செய்தவுழுவலியே

ஊழிற்பெருவலியாவுள்வென்றுரைத்தார்குறளிற்
சூழிற்செயந்திப்பதியிற்குமாரன்சுடர்த்தளிமுன்
ஆழிப்புனற்கயற்றீர்த்த * மெண்மூன்றுமுண்டேயதனில்
மூழ்கிற்பிறப்பறுமுத்தியுண்டாஞ்சென்றுமூழ்குமினே (26)

செந்தினைமாவினைத்தேனொடுவள்ளிதினைப்புனத்திற்
றந்திடவுண்டவனேநின்றிருவடித்தாமரையை
வந்தனைசெய்திடுமடியேற்கருள்தரவந்திடுவாய்
செந்தியில்வாழுங்குமாரவறுமுகசிற்பரனே (27)

பரனேசிவனுக்குபதேசஞ்செய்தபரமகுரு
பரனேயறுமுகதேவாவசுரபயங்கரவெண்
கரனேமுதலெவருந்தாழுயிலவகாத்தருள்தற்
பரனேசெயந்திப்பதிமேவிவாழும்பரஞ்சுடரே (28)

சுடர்விடும்பொன்முடித்தேவரைக்கொல்லத்தொடர்ந்தபெருங்
கடல்விடமுண்டசிவன்புதல்வாவெனைக்காத்தருள்கை
விடிலுன்குலப்பெருந்தன்மைக்குமாசுறுமெல்லியபல்
கொடிதிகழ்மாடச்செயந்தியில்மேவுங்குணலயனே (29)

ஆலயந்தாசருளமாகவென்றுமமர்ந்திருக்கும்
மாலையமானெனுங்கர்த்தாகுருபரவானவங்க
வேலையனுள்மலைசூர்கடல்மீதினில்வீட்டுவினைப்
போலையயார்செயஞ்செய்தார்செயந்தியிற்புண்ணியனே (30)

---

* வதனாரம்பம், தெய்வயானை, லக்ஷ்மி, சித்தர், திக்குப்பாலகர், காயத்திரி, சாவித்திரி, சரஸ்பதி, அயிராவதம், வயிரவன், வள்ளியம்மை, துர்க்கை, ஞானம், சத்தியம், தர்மம், முனிவர், தேவர், பாவநாசம், கந்தபுட்கரணி, சேது, கங்கை, கந்தமாதனம், மாதுர், பிதுர் என்னும் திருநாமங்களையுடைய தீர்த்தங்கள் ௨௪ உள்ளன.

புண்மிசைவேலுற்றதுபோலயானுபிபொன்றும்மை
மண்மிசைநோயுற்றழுந்திடவோவெனவந்தருள்வாய்
விண்மிசைவானரும்பூசுரர்யாவரும்வேண்டிநிதம்
கண்மிசையொத்தச்செயந்தியில்வாழ்செழுங்கற்பகமே (31)

கற்பகம்நீங்காதுறைமகள்செந்திலைகாத்திடினாள்
பொற்புளம்நீங்காதுருப்பலவாயவண்போய்மணந்தாய்
கற்பகநாட்டுக்கிறையானவன்றருகாதலிதான்
அற்பகல்ஞான்படையாளோசெயந்தியிலுண்டவனே (32)

ஆண்டவனென்றுனைப்போற்றுதிருக்குமரிலிலர்கள்
வேண்டியகாரியமெவ்வாறடைவர்விண்ணோர்கடொழுந்
தாண்டவஞ்செய்தவன்பாலயெனக்கருள்தந்திடினைத்
தீண்டியென்சிந்தையில்வைத்தேன்செயந்தியிற்றேசிகனே 33

தேசிற்சிறந்திடும்பூமாதினைநற்றித்திலகமெனப்
பேசப்பிறங்கிடுஞ்செந்தூரில்மேவியெம்பெம்மைநல்
வாசக்கடம்பணிதோளானைவாழ்த்துமின்னவன்னயன்னைப்
பாசத்தைநீங்கியுலகீர்பரகதிசேருதற்கே (34)

சேருந்திருவொடுகல்வியும்ஞானமுந்தேசும்வருந்
தீருந்சிறுமையுந்துன்பமுஞ்சிக்கறுந்தேவர்களும்
சாருங்குமாரன்திருக்கையில்வேலுடைச்சண்முகன்றன்
பேருங்குணமும்புகழும்பிறங்கிடுஞ்செந்திலையே (35)

இலையார்ந்திடுந்திருநீறுடன்சந்தனமெப்பொழுதும்
நலமாய்த்தரத்தகுங்கோவிலுந்தீமையைநந்திடச்செய்
தலையாகியசிந்துவின்தீர்க்கமுஞ்சண்முகப்பரனும்
நிலையாஞ்செயந்தியினல்லாதுகாணிலநிகழ்ந்தனனே (36)

மின்னெனத்தோன்றிக்கெடுவாழ்வைநம்பியிம்மேதினிமேல்
தன்னியல்பொன்றையுமோராமலென்றுந்தருக்குறுவார்
பன்னிருகையுடையான்சீர்செயந்திப்பதியினிற்போய்ப்
பன்னித்துதியார்நமன்வரும்போதென்னபண்ணுவரே (37)

பண்ணிற்சிறந்தமொழியாளுமற்றுளபாக்கியமும்
மண்ணிற்சிறந்ததனதடியார்களுக்கெப்பொழுதும்
நண்ணிற்சிறந்தசெயந்தியிற்றானெனவந்தமர்ந்தான்
விண்ணிற்சிறந்திடுந்தேவர்குழாஞ்சிறைமீட்டவனே (38)

மீட்டும்பிறந்துழலாமற்பரகதிமேவும்வழி
காட்டுஞ்செயந்திப்பதிமேவியன்பர்களித்துரைக்கும்
பாட்டுஞ்சுரும்பமர்பூங்கடம்பாரமும்பண்புபெறச்
சூட்டும்புயத்தெங்குமாரன்றுகளறுமாறெழுத்தே (39)

எழுத்தறியாதவருங்கூறுமுன்னருளெய்தியபின்
விழுத்தகுநூல்களைச்செய்தாரனந்தம்விரிந்தமறை
பழுத்தகுகப்பெருமானேயெனக்கருள்பாலியெலாம்
வழுத்தும்படிக்குச்செயந்தியில்நாளும்வசிப்பவனே (40)

வசியந்தருமெழுத்தாறையுமோதியுன்மாணடிகள்
நிசியும்பகலுந்தொழுதேத்திடிற்றொடர்தீவினையும்
நசியும்நினைத்தவையாவுங்கைகூடிடும்நாண்மலர்த்தேன்
கசியக்கயலுணுஞ்செந்தூரில்வாழ்பெருங்கற்பகமே (41)

கற்றலுமென்னினைப்பணியார்செழுங்கற்பகத்தைப்
பெற்றலுமென்னபயோசனம்பெறுவார்கணிறை
நற்றபதர்களுந்தேவருமேத்திநனிவணங்க
வற்றவலைகட்டிற்செந்தூரில்வாழுமறைப்பொருளே (42)

மறைதேடியின்னு முனைக்காணலின்றிவருந்துமெனில்
முறையேயுனைக்கண்டடியேன்பழிச்சலெவ்வாறுமொழி
குறைவேதுமின்றியடியாருளத்திற்குடியிருக்கும்
நிறைவேசெயந்திப்பதிமேவிவாழ்கின்றநின்மலனே (43)

நின்மலமாகவுயிர்தோறும்நின்றுனைந்தவரைத்
தன்மயமாகத்தனிபுரிகுதல்தான்பெரிதோ
பொன்மலைகாகந்தனைச்சேர்ந்திடக்கணப்போதினிலே
தன்மயமாக்கியதாலூற்செயந்திபிற்ஷண்முகனே (44)

முகமாறிரண்டுடன்செந்தூரில்வந்துமுளைத்தடியார்
அகமாகிடத்திருநீறள்ளிநல்கிடுஞ்சுந்தரமாங்
குகவேடிருக்கழலன்போடுநெஞ்சினிற்கொள்கிலரேல்
மகமாயதியற்றினும்வாழார்கள்மண்ணினும்வானத்துமே (45)

வானந்தரணியிசைவாழுந்தேவருமாந்தர்களுந்
தானந்தவமுதல்யாவும்நினைத்தொழுந்தன்மையெவ்வே
ஆனந்தமாகநினைப்பணிவாரிதற்கையமுண்டோ
கானந்தமருங்கடற்செந்தில்வாழ்கின்றமாதவனே (46)

மாதவர்சிந்தைதனிற்றாயதாகவளங்குலவி
யாதவன்சந்திரன்றோய்மாடகூடமமர்ந்துநாளும்
போதலர்வாவியுஞ்சோலையுஞ்சூழப்பொலிந்துகடற்
சீதளவாடைதினஞ்சேர்செயந்தியெந்தேயிடமே (47)

இடம்பொருளேவன்மற்றெல்லாமடைகுவரெங்கணுநின்
னுடம்பொடுஞ்செல்லுவர்தேவர்களோத்தவுந்திருமார்
கடம்பொழியானைமுகத்தாற்கிளையவன்கண்ணருளைத்
திடம்பெறச்செந்திற்போய்ச்சிறிதூற்றிடப்பெற்றவரே (48

பெற்றபிதாவுக்குபதேசஞ்செய்துபெருங்குருப்பே
ருற்றனைநீபொதிகாசலமாமுனிக்கோதினைபின்
நற்றவனொத்தனைபேர்ககோவுனாத்தனைநான்றெளிய
வெற்றைக்கெனக்கருள்செய்வாய்செயந்தியிலெம்பரனே (49)

எம்பிரான்ஷண்முகன்றெய்வானைவள்ளியெனுமிருவர்
தம்பிரானென்றுதழுவும்புயாசலன்சந்தவெற்பன்
நம்புவார்க்கின்னருள்செய்வோன்செயந்தியில்நாயகன்காண்
வம்பமர்நீபத்தொடைதந்துமேவியவானவனே (50)

வானவராகயிருந்தாலுமென்னமுன்மாற்றலராந்
தானவராலுற்றபாட்டுக்களவிலைத்தாரணியில்
மானவராகயிருந்தாலுமென்னநின்மாணடிகள்
தானகலாதுறச்செய்வாய்செயந்தித்தயாநிதியே (51)

தயவாகியநிதிசெந்தியிற்சார்குகன்றந்தனனோர்
பயமானதில்லையமனுக்கெஞ்ஞான்றும்பரிந்துவரும்
நயமாகியவினையாவையுந்நீங்கறும்ஞாட்பினிலுஞ்
சயமானதுவரும்நெஞ்சேயமக்கொருதாழ்வில்லையே (52)

தாழ்வுமுயர்வுஞ்சரியெனவெண்ணிநற்றுபதர்கள்
வாழ்வைக்கருதாதுனதடித்தாமரைவந்துபணிந்
தூழைக்கடந்தனர்யான்செயுமாறெதிங்குற்றெனையாள்
தாழையில்வானைகள்தாவுஞ்செயந்தியிற்சற்குருவே (53)

சற்குருதந்தைதபுந்தாயுங்கடவுளுந்தாரணியில்
எற்குனையன்றியில்வேறில்லையேவந்தெனக்கருள்வாய்
பொற்குடமல்குஞ்சிகரியங்கோவிலும்பூம்பொழிலும்
நெற்குவிமாடமுமல்குஞ்செயந்தியில்நின்றவனே (54)

நின்றான்செயந்திமுதலாந்தலங்களில்நேயமுடன்
சென்றானுழைதருமாதினைச்சேரத்தினைப்புனத்தில்
முன்றான்புரிவினையாலேவருமிருமுப்பகையும்
வென்றானருளத்திலிருந்தான்றிருக்கரவேலவனே (55)

வேலைத்திருக்கரத்தேந்தியநாயகன்மெய்யடியார்
ஆலைக்கரும்பினையாகவேயாதுவந்தாண்டுகொளக்
காலைச்செழுங்கதிர்போல்மயில்மேல்வருங்கர்த்தனுறும்
மாலைத்தவிர்ப்பான்செயந்தியைச்சேர்குலமாமயிலே (56)

குலந்தவம்மானங்குடிபுகழ்கல்விகொடையறிவு
வலங்கெடுமேமிடிவந்துறினிங்கெனைவந்தணுகா
தலம்பொருதோளாயருள்புரிவாயுனையுற்றடைந்தேன்
நலந்திகழ்செந்தியின்வாழ்வேசிவன்றருநாயகமே (57)

தருப்புயல்சேர்செழுங்கையாய்குபேரசம்பன்னகெடா
வுருப்பொலிவாமதவேளேயெனத்தினமொன்றுகொடாக்
கருத்துடையார்தமைப்பாடிநொந்தேன்கடைக்கண்ணருள்
தருப்புடைசூழுஞ்செயந்தியின்மேவுஞ்சடாக்ஷரனே [செய்

சடாட்சரஷண்முகசெந்தியில்வாழுந்தயாபரநின்
கடாட்சமுண்டாகிடப்பெறாரொருகுறைகண்டதிலை
விடாச்சுரம்பாண்டியர்போற்றிடப்போக்கிமுன்வீணமணும்
அடாச்செயலாரைக்கழுவேறிடச்செய்ததற்புதமே (59)

அற்புதசெந்தியில்வாழ்கின்றதேவவறலிலெழும்
புற்புதம்போலழியுந்திறவாழ்வினைப்போதயன்றன்
கற்பமுந்தாழுறல்போலேநினைந்துகளித்துன்றுட்
பொற்பதம்போற்றிப்பணியாதுமானிடர்போவதென்னே (60)

போக்கும்வரத்துமுலகிலுண்டாமிதுபோகவுடன்
நீக்கும்பெருமானடியாருளத்திலநினைந்தவையுண்
டாக்கும்பெருமான்செயந்தியில்வாழ்குகனுருங்கண்டீர்
காக்கும்படிக்குந்துசங்கட்டிநிற்குமிக்காரணனே (61)

காரணனெல்லாவுயிர்க்குங்கடல்விடமுண்டருளும்
பூரணன்பாலன்புராதனன்போகியிற்கண்வளரும்
நாரணதேவர்க்குரித்தாமருகனெனன்றுளும்வந்து
ஆரணன்போற்றச்செயந்தியில்மேவியவாண்டவனே (62)

ஆண்டுளனீண்டுளனென்றுதுவன்பாகத்தளியிற்
பூண்டிகழ்வள்ளிதெய்வானையிரோடும்பொருந்தியவர்
வேண்டியவின்பங்கொடுத்தருள்வான்மிகுமேன்மையுடன்
பாண்செயும்வண்டடர்சோலைச்செயந்திபிற்பண்ணவனே (63)

பண்ணுரருணகிரிநாதர்செய்தபனுவல்புனை
தண்ணார்கமலமலர்த்தாளிலிச்சிறுதாழ்பனுவல்
கண்ணுதரத்துடனேபூண்டெனக்கருணல்கிமனம
புண்ணுகிடாதருள்வாயோசெயந்திப்புராதனனே (64)

புராதனமாமறைதேடிடுங்கந்தப்புனிதனெழு
தராதலமேத்தத்திருச்செந்தில்மாநகர்தன்னில்நிதம்
பராவடியார்துயர்திரும்படிக்கிதம்பண்ணிடவும்
நிரர்சனர்வாழத்தருவனைக்காயவும்நின்றதுவே (65)

நிற்பதுயின்னதுநில்லாததின்னதுயென்றுநிகழ்
சொற்பனந்தன்னிலுங்கண்டறியீர்சுயமாஞ்செயந்திப்
பொற்பதிநிற்பவன்றன்னருட்செல்வமொன்றேபுவியில்
நிற்பதுமாற்றதுநில்லாதுநிற்பதைத்தேடுமினே (66)

மின்னுமணிமுடிவேந்தரும்யாரும்வியனுலகிற்
றன்னுயிரீந்தேயொழிந்தனவென்னையித்தாரணியில்
இன்னும்பிறக்கும்படிபுரியாதுன்னிணையடியில்
மன்னும்படிக்கருள்செய்வாய்செயந்தியில்வானவனே (67)

வானிறைபொன்முடிமீதேவளையினைவிட்டெறிந்தான்
றேனிறைமேருவைச்செண்டாலடித்துச்செருக்கொழித்தா
மீனிறைவேலையைவற்றிடக்கூரயில்விட்டெறிந்தான் ன்)
ஞானமதுரைக்கிறையாய்ச்செயந்தியினாயகனே (68)

செயந்தரும்வேலினைச்சேந்தனைச்சேவற்கொடியினைப்பொன்
மயஞ்செறிமஞ்ஞையைவள்ளிதெய்வானையைமாண்படையை
நயந்தருஞ்சிந்துவைச்செந்திலைக்கோவிலைநற்றுறைவைப்
பயன்பெறப்பாடுமின்பாடுமின்னீள்வினைபாறுதற்கே (69)

பாறுங்கொடியுடன்சேனமும்வான்மிசைப்பந்தரிடச்
சீறுந்தகுவரைச்சேனையினோடுஞ்செருக்களத்தி
ராறம்புயத்துடைச்செந்திலன்வேல்கொண்டறுத்திலனேற்
கூறுஞ்சுரர்சுகமாயெங்குவாழ்ந்துகுலாவுவதே (70)

குலப்பகையாவையும்வென்றிடலாங்குடியைக்கெடுக்கும்
புலப்பகையைந்தையும்வெல்லரிதேயைம்புலப்பகையை
வெலத்தகுமாயுதம்நின்னாறெழுத்துமவிளங்கருளுஞ்
சொலத்தகும்நீறுமிவைதாசெயந்தியிற்சுந்தரனே (71)

சுந்தரவேளினைச்செந்தியில்வாழுஞ்சுகுணனையே
சந்ததங்காணவிழிசெவிகேட்டிடத்தாளிணைகள்
வந்தனைசெய்யச்சிரம்வாய்வழுத்திடவாய்த்தவர்தா
மெந்தக்குலத்திலிருந்தாலுமியாருமிறைஞ்சுவரே (72)

இறைஞ்சடியார்க்குறும்புன்கணைநீக்கி யின்பமருள்
நறுஞ்சுவைத்தேனனையாயுனைப்போற்பரம்நானறியேன்
அறஞ்செயும்பார்வதிமைந்தாவெனக்கருளன்புடன்பொற்
புறந்திருச்செந்திற்பதிமேவுமுத்தமபுண்ணியனே (73)

உத்தமமாம்வதனாரம்பமூழ்கியுன்றாளிணைகள்
பத்திபிறைற்பணிந்தேத்தாதிருந்தயிப்பாவியையிங்
கெத்தனைகொண்டினியாள்வாயருந்தவரோதமறுஞ்
சித்தர்களோத்தச்செயந்தியில்வாழுஞ்செழுஞ்சுடரே (74)

செழுங்கதிர்மாமணிமாடத்திலெங்குஞ்செறியிருளை
விழுங்கித்திகழ்திருச்செந்தூரில்மேவிவிளங்குமருள்
புழுங்குவெஞ்சிந்தையிற்றனேயுனைத்துப்பொருமகந்தைக்
கிழங்கைப்பிடுங்கியெறிதாசர்பெற்றிடக்கிட்டிடுமே (75)

கிட்டற்கரிதாப்பொருள்யாவும்வந்துறுங்கீர்த்தியரும்
முட்டுப்படாதுயாமோக்ஷமுங்கிட்டிடுமோதமிற்
றுட்டத்தகுவர்குலமாய்த்தவேலனைச்சுந்தரனை
மட்டவிழ்நீபத்தொடையனைச்செந்திலைவாழ்த்தினர்க்கே ()

வாழ்த்தாதவாயினைக்காணாதகண்ணினைவாழ்வுபெறத்
தாழ்த்தாதசென்னியைக்கேளாதகாதினைத்தாமரிந்து
வீழ்த்தாதவன்பர்கள்தானல்லரோசெந்திமேவியெனை
யாழ்த்தாதழறிடைகாத்தாளறுமுகதேவனையே (77)

தேவாதிதேவனைச்செந்தூரிலென்றுந்திகழ்மணியை
மூவாதநாதனையாவருமேத்தும்முதற்பொருளைப்
பாவாணர்போற்றிடச்சங்கத்தின்மேவியபாவலனை
நாவாற்றுதிக்கிநெஞ்சேயுறுபவநீங்கிடற்கே (78)

நந்தாதஞானவிளக்கேயநந்தவர்காடித்தொழும்
மாந்தாயராம்வள்ளிதெய்வானையோடுமிசைந்தெழுந்து
வந்தாதரிககச்சமையமிதாமின்றுவந்தருள்வாய்
நந்தார்கடற்கரைச்செந்தூரில்வாழுமென்னுயகமே (79)

என்செயலாலொன்றுறுவதுண்டோவஃதில்லையெலா
முன்செயலாமெனையாண்டுகொள்வாய்தனியோரெழுத்தைப்
பொன்செயுங்கொன்றைச்சடையாருவந்திடப்போந்துரைத்
என்சொலநின்புகழையாசெயந்திக்கிறையவனே [தாய்
செந்துவர்வாயுமைமாதன்றிருநுதற்கண்ணிலுதித்
தந்தழல்மாருதமேந்திச்சுரநதியாற்றிலுறுஞ்
சந்தச்சரவணபொய்கையில்விட்டிடத்தான்வளர்ந்து
செந்தியில்வாழ்ஜகநாதாயெனக்கருள்செய்குவையே (81)

செய்யிலனங்கண்டுயில்கின்றசெந்திற்பதியுறையும்
ஐயன்கருணைக்களவுமுண்டோயிதையாரறைவார்
மெய்யன்பருள்ளத்திருக்கியென்றும்விளங்கடியா
ருய்யும்படிக்கருள்வான்புதமேத்துதலுத்தமமே (82)

உத்தமமென்பதென்னெஞ்சேபசியறவுண்டுடுத்து
நித்திரைசெய்வதிங்கென்றேநினைத்தைநீக்கிவரும்
பத்தர்கடுன்பறச்செய்தேயதந்தவந்துதித்த
நத்தமர்செந்திற்பதியானைநாடுவதென்றறியே (83)

அறிவொன்றிலாப்பித்தராகினுஞ்செயினையாதரவாய்
நெறிநின்றதந்தையர்காப்பதல்லாற்கைநெகிழவிடார்
அறைகின்றவினைத்தழுதலேயெனையுமவ்வாறருள்வாய்
நறைதுன்றுநீபத்தொடையாய்செயந்திநிறையவனே (84)

செங்கழுனுப்பணினின்றும்வளைக்குகைசேர்ந்திருந்தும்
இந்தப்புவியைவலம்வந்துகானிடஞ்சென்றுமறல்
கந்தஞ்செறிகனிமூலங்களுண்டுங்கதிக்கலைவீர்
செந்திலைப்போய்ப்பணியுங்காண்டிருக்குகன்பேருரைத்தே ()

தேய்கின்றதென்றுநாஞ்சிந்தைநொந்தேதினம்பாலருந்தி
மாய்கின்றயாக்கையைப்பேணநிற்பீர்கொடுமாமறலி
காய்கின்றபோதிலென்செய்வீர்புரக்கக்கதித்தலைகள்
பாய்கின்றசெந்திற்பதியானையன்பொடுபற்றுமினே (86)

பற்றறுத்தன்பதமேகதியாகப்பணிந்துருகும்
நற்றவரின்குழுநாடாதுபொன்புவிநாரியர்தம்
அற்புற்றிதுவரைவாழ்நாள்கழித்தவறிவிலனை
யெற்றைக்குநீயுவந்தாள்வாய்செயந்திக்கிறையவனே (87)

திக்கறியாதலைமாறுபிபோலுந்திகைத்திடுமென்
பக்கமிருந்துபதேசம்பகர்ந்துநற்பண்பருள்செய்
நக்கன்பிரமன்குடமுனிவேண்டநின்றிடுபோ
தக்கலையாரிடங்கற்றாய்செயந்தியிலாண்டவனே (88)

ஆண்டலைசேர்ந்துவசத்தான்செயந்திக்கதிபனயில்
பூண்டகரத்தன்மயில்வாகனத்தன்பொருந்தடியார்
வேண்டியவின்பமருள்வோனறுமுகன்விண்ணவர்கள்
தீண்டற்கரியானடியேனுளத்தினிசேர்ந்தனனே (89)

சேரும்பிரீதியுமைந்தருஞ்சுற்றமுஞ்சேட்டோரும்
பேருந்துணைவருந்தந்தையுந்தாயும்பிரிந்திடுவார்
யாருந்துணைவரமாட்டாரெனக்கருள்பாரிபுரிவார்
பாருன்றிருக்கண்டக்கண்ணுறச்செயந்திப்பதிவள்ளலே (90)

பண்ணையில்மானும்விழியாளைக்கூடிப்பரிந்துமிகப்
புண்ணையன்பாகத்தரப்பெறுவீரொழிற்பொய்கையினிற்
பண்ணையிற்சங்குதவழ்மாசெயந்திப்பதியுறையும்
புண்ணியன்றாளைக்கருதீர்பவவினைபோக்குதற்கே (91)

வினையால்வருந்தித்திரிந்ததுபோதுமிம்மேதினியில்
அனைபாலருந்தப்பிறக்கவொட்டாதுவந்தாதரிப்பாய்
சினையால்வருந்திக்கடற்சங்கமேங்குஞ்செயந்தியினும்
நினைவாருளத்துங்குடிகொண்டஷண்முகநித்தியனே (92)

நித்தியனாகச்செயந்தியில்வாழுயர்நின்மலனைச்
சத்தியினாதரப்பிள்ளையைக்கந்தனைத்தாடுதியா
தெத்தனைதப்பிதஞ்செய்தீரெனச்சமன்றூதுவர்கள்
பத்தியிலார்தமைத்தண்டாலடிக்கப்படுவர்களே (93)

படுதுயர்நீயறியாதவன்போலபராமுகமாய்
நடுவன்வரும்வரைநீயிருந்தாற்சுகம்நண்ணுவனோ
கொடுவின்றொளிர்மயில்மீதேறிவந்துகுறைவில்வரங்
கடலொன்றியதிருச்செந்தூரில்வாழ்சிவகான்முளையே (94)

கான்முளைவந்துறப்பாவங்கணீங்கிக்கதிபொருந்த
வான்றருங்கங்கையிற்சேதுவின்மூழ்கமனந்துணிவீர்
கான்வருபூங்கடம்பாரன்செயந்தியிற்கார்கடலில்
நான்முகனு [illegible] தனாரமபமாடிடநண்ணுமினே (95)

[illegible] ர்முனம்பன்னிருதோளுமறுமுடியுஞ்
[illegible] லறுமுகமும்பன்னிருநேத்திரமுந்தயங்கிடமால்
கல்வருமோரிருமாதரினோடுகனிமயின்மேல்
பன்மிசைதோன்றியருள்வான்செயந்தியில்வானவனே (96)

வான்பெறவேண்டிப்பரிமகம்நூறும்வருந்திமிகத்
தான்செயவேண்டுவதில்லைச்செயந்தியிற்சண்முகன்றன்
றேன்மலர்ப்பாதந்தொழுதோரெழுத்துஞ்செபித்திடிலவ்
வானொன்றுமோவதின்மேலாங்கதிகளும்வந்துறுமே (97)

வந்துக்கிரன்சுதைசிந்துவின்மூழ்கிவணங்கவுடன்
இந்துகவிணைமுகமானதுகந்துகத்தின்முகம்போய்ச்
செந்திற்பதியில்முகாரம்பதீர்த்தந்தனைத்தவருக்
கெந்தப்பவமுமில்லாதெனமாமறையேத்திடுமே (98)

எத்தடியார்க்குறுமின்னலைநீக்கிநல்லின்பமுறக்
காத்திடுமெங்கள்செயந்திப்பிரான்றிருக்கண்ணருளை
நாத்தழும்பேறப்புகழ்ந்தஞ்சலித்துநனிபெறுவீர்
மாத்தருஞ்செல்வமுங்கல்வியுஞ்ஞானமும்வந்துறற்கே (99)

வந்தித்ததேவர்களெல்லாருநற்பெருவாழ்வடைந்தார்
நிந்தித்தவுணர்களையெல்லாமொழித்தனனிச்சயமாய
செந்திற்பதியுறைசெவ்வேளைவாழ்த்தித்தினந்தினமுஞ்
சிந்திக்கவேண்டுமென்னெஞ்சேயருட்பெருஞ்சீர்பெறவே ()

முற்றிற்று.



உ

வேலுமயிலுந்துணை.

# பழநிப் பதிற்றுப்பத்தந்தாதி.

இஃது

முசிரியிலிருக்கும்

திருத்தாந்தோணி அப்பாவுபிள்ளை

குமாரர்

வக்கீல் ம-ா-ா-ஸ்ரீ,

கல்யாணசுந்தரம்பிள்ளையவர்கள்

வேண்டுகோளின்படி

ஷை முசிரியிலிருக்கும்

வித்வான் பிரம்மஸ்ரீ,

தே-குரு-சுப்பிரமணிய ஐயரவர்களால்

இயற்றப்பட்டு,

ஷை கல்யாணசுந்தரம்பிள்ளையவர்களால்

சென்னை:

பண்டித மித்திர யந்திர சாலையில்

அச்சிடப்பட்டது.

சுபகிருது ௵ - ஆவணி ௴

வர், நச்சுவான்கொடைக்கல்யாணசுந்தரப்பேர்நட குணன் கட்டபடு நெறியென், றச்சுவாசனத்திலேற்றியன்புடையாரகமகிழ்தரப்புரிந் தனனே.

---

காங்கயம் - அஷ்டாவதானம்

## சேஷாசலநாயுடு அவர்கள்

இயற்றியது.

கற்றுப்பத்தந்தாதிகருமைநேர்நகிலதரங்கல னங்கண்கள்
சொற்றுப்பத்தந்தாதிகழுமயிலேயெனமடவார்த்துதியாதின்ப
முற்றுப்பத்தந்தாதிமகிழ்பழநிமுருகாகழற்குருகிநற்ப
திற்றுப்பத்தந்தாதிதமிழ்வலசுப்பிரமணியன்செப்பினனே

---

நாமக்கல் ஹைஸ்கூல்தமிழ்ப்பண்டிதர்

## ம. சி. ஆனையப்பமுதலியாரவர்கள்

இயற்றியது.

பம்பராவரசுங்களிகொளப்பழநிப்பதிற்றுப்பத்தாகுமந்தாதி
வம்பரார்தொடைக்கல்யாணசுந்தரனும்வள்ளல்வேண்டியபடிகுசர்
கப்பராமாயணப்பிரசங்கங்கற்றவர்புகழ்ந்திடப்புரியு [குக்
மிம்பரார்சீர்த்திச்சுப்பிரமணியவியல்வலோனியற்றினன்மாதோ.

---

முசிறி - வித்துவான்

## கு. அ. ஆறுமுகம்பிள்ளையவர்கள்

இயற்றியது.

மகன்றந்தைக்காற்றுதவியெனுங்குறளுக்கிலக்கியமாய்வந்தசீலன்
குகன்கழனீங்காதவுளன்கலியாணசுந்தரநற்குணவான்கேட்பச்

செகம்புகழுந்தென்பழநிப்பதிற்றுப்பத்தந்தாதிசெப்பினன்றென்னகங்குடிகொண்முனிவனெனத்தமிழ்வலசுப்பிரமணியாவலோனே.

---

## முசிறி· வீ. அப்பாயிநாயுடு

### இயற்றியவை.

சுரும்பமரும்பொழில் சுலவுந்தென்பழநிவடிவேற் கைத்துணையின்மீது, கரும்பனையமொழிபுணர்த்திப்பதிற்றுப்பத்தந்தாதி கழறினனல், விரும்புதமிழ்முனிவனெனவியனுலகுகொண்டாடும்விளக்கும்வாய்ந்த, பெரும்புலமைநிறைந்திடுஞ்சுப்பிரமணிய பாரதியாம் பிரபலோனே.

இப்பாக்கடமையெவரும்படித்துய்யவச்சதனிலேற்றினனலப்பாருஞ்சடைப்பரமனரும்பொருளாமாறுமுகனலர்ப்பூந்தாளைத்தப்பாதுபழிச்சிடுவோன்சர்ச்சனர்கண்மணியனையான்சாமனெப்பாலசெப்பாருங்கொடைக்குரிசில்கலியாணசுந்தரனுஞ்சீர்த்தியானே.

---

## திருநயம் - அருட்கவி
## நரசிம்மபாரதியாரவர்கள்

### இயற்றியது.

வன்னமுதலிலக்கணவைவாரிதியுண்டசத்தியன் போன்மறைக்குலத்தின், மன்னமுதவாணிவிலாசப்புலவன்குருசுப்ரமணியன் யாரும், பன்னமுதனுக்குகிரெனப்பழநிவேள்பதிற்றுப் பத்தந்தாதி, சொன்னமுதவுநகொடைக்கல்யாண சுந்தரன்கேட்கத் தொடுத்தீந்தானே.

---

இந்நூலாசிரியர் மாணாக்கருளொருவராகிய

பரம்பக்குடி

## சு. கோபாலய்யங்காரவர்கள்

இயற்றியது.

பூமேவுபழநிமலைத்தண்டபாணிபொன்னடிக்குப் புலவரெலாம் புரிந்துபோற்றப், பாமேவுபொருணன்கும்பயப்பதாயபதிற்றுப்பத் தந்தாதியெனும்பாமாலை, மாமேவுகுருசுப்ரமணியனென்றுமன்னு பெயர்க்கேற்பவிணைமாணுவோர்க்குத், தூமேவுகுரவமைந்தோன சொலக்கல்யாணசுந்தரவேளச்சிட்டுதேதுலக்கினுணல்.

---

மதுரைஜில்லா தேவகோட்டை

வெ. ஆ. தி. மாயாண்டிசெட்டியாரவர்கள்

குமாரர்

## சிதம்பரச்செட்டியாரவர்கள்

இயற்றியது.

திருமேவுபழநிமலைக்கந்தசாமி செவிமடுப்பத்தமிழ்ப்பதிற்றுப் பத்தந்தாதி, குருமூர்த்தியந்தணன்செய்தவத்துதித்துக்குலாவுஞ்சுப் பிரமணியன்குணத்தான்மிக்கோ,னொருமேவன்பியல்கெழுமவமுது குத்தாங்குரைத்தனனிவ்வுலகரிதையோதியுய்வான், கருமேவுமெ ழின்முசிரிதன்னில்வாழுங்கலியாணசுந்தரமாலச்சிட்டானே.

---

முருகக்கடவுடுணை.

# பழநிப் பதிற்றுப்பத்தந்தாதி.



## காப்பு.

பூமேவுபொழில்சுலவும்பழநிமலைக்கலையுணரொண்புலவர்க்கோங்கு
தூமேவுபதிற்றுப்பத்தந்தாதித்தொடைமாலைதொடுத்துச்சாற்ற [ந்
மாமேவுமதுரச்சொன்மலர்நான்குமழுங்கிடுநெல்வளத்தைவான் கோ
காமேவுவான்கடத்தனீர்க்கடத்தைக்கவிழ்த்தகடக்களிறுதானே. [ன்

---

## நூல்.

உலகெனுமணங்குக்கிட்டவொளிநுதற்றிலதமென்னப்
பலர்புகழ்ந்துரைக்கத்தக்கபழநியிற்றண்டபாணி
யலகிலாமலைகளொப்பவடியனேனெஞ்சக்கல்லு
மிலகுறுகோயிலாக்கொண்டிருந்தனன்பொருந்துமென்றே. (க)

* என்றுபன்னிரண்டுந்தம்முளிணைந்தொளிபரப்பியிட்டாங்
கொன்றுநற்பவளமேனியொளிசெயக்கருங்கட்டோகை
துன்றியமயின்மீதேறித்தொன்னிலமுழுதுஞ்சூழ்ந்த
நன்றுறுபுகழோன்செய்யபழநியனலமெர்கீமே. (உ)

ஈகுவர்பெரிதும்வித்தமெனக்கலமாந்தர்தம்மைப்
போகுயர்பெருமைசொற்றுப்புகழ்ந்திடாதுமையின்சேயைப்
பாகுறபொழில்சுலாமோண்பழநியிற்பெருமான்றன்னை
வாகுறதமிழாற்பாடிமகிழமுன்பெண்ணேற்றேனே. (ங)

---

* என்று - சூரியன்.

நோற்றவொள்ளறுமீன்மாதர்நசுப்பிறமுலைப்பாலுண்டு
சாற்றரும்புகழ்மையந்தத்தையலார்க்களித்தவையந்தன்
பாற்றிரைத்திருவாழுந்தென்பழநியம்பதியாள்கந்தன்
சேற்றுறுக்கமலத்தாட்பூச்சிதடனேன்முடிக்குரித்தே. (௪)

உரிமையிற்பெரியவுன்றொருமுறைவணக்குவோர்க்குத்
தருநிழலிருக்கைபாதிதருகுவையென்றுனின்றுட்
பெருமையையெவரேகண்டுபேசிடத்தக்கநீரார்
பருமணிகிடந்திமைக்கும்பழநியிற்குடிகொண்டோனே. (௫)

கொண்டலேலகரியகூந்தல்குவிமுலைகனகச்செப்பே
மண்டலமதியேதுண்டமெனத்தினமகளிர்தம்மை
விண்டுதண்டலைசூழ்ந்தோங்கும்பழநியில்வாகன்றனைக்
கண்டவன்புகழைவாழ்த்தாக்கலர்க்குமோர்கழுவாயுண்டே. (௬)

உண்டெனக்கிணையாய்வேறுதெய்வமென்றொருவாற்றுறு
மீண்டுறுமனத்தரேனும்விளம்பிடத்துணியாரென்றுற்
பண்டிதராயினெங்ஙன்பகர்தரலிலையேயெங்கும்
வண்டுபொண்மிழற்றுமல்லற்பழநியில்வளர்செவ்வேளே. (௭)

வேள்கழைச்சிலைகுழைத்துவெறிமலர்ப்பகழ்பெய்ப்பன்
ஞாள்களும்வருத்தனைந்துநங்கையர்க்கடிமையாயுன்
றாள்களைமறந்தபொல்லாச்சழக்கனேன்றனையாள்வாயோ
நீள்கிரிப்பழநித்தேவாதினந்துளங்கிருமையுற்றே. (௮)

உற்றருச்சனைசெய்தேத்துமொருமறைச்சிறுவற்காப்பொய்
சொற்றுமுன்பருள்செய்தோன்றமரன்றலென்றனையடுத்தேன்
கற்றவர்புகழ்ந்துபாடும்பழநியிற்கந்தாவென்பாற்
சற்றுநீகருணையின்றித்தவிர்வதுதகுதியன்றே. (௯)

அன்றறிவாமென்னாமலறஞ்செயப்புகுவார்நின்னை
யொன்றியோர்முறைவணங்கவொன்றுமேயமையாரற்ப

மன்றவெங்கானஞ்சென்றுவருந்தியோகுழந்துநிற்ற
லென்றிருப்பொலிந்தோங்குந்தென்பழநியிலீசன்சேயே. (௪௦)

வேறு.

சேயவன்கலர்க்குத்தொழும்பினர்க்கணியன்றிசழ்வடிவேற்கரத்
தெங்கோன், மாயவன்பிறவிநோய்க்குறுமருந்துயகிமைசேர்பழநிமா
மலையான், றூயவன்றெய்வயானைநன்கணையுந்துணைனச்சொலத்த
குந்தோளா, ஞுபவனெனக்குவேண்டியவைத்துமகமகிழ்ந்தளித்தரு
ள்பவனே. (௪௧)

அருளினைப்பெறுவான்பொறிவளர்பழநியமர்ந்துறைசேயையண்
டருக்கா, யருளினைப்பெறுவெஞ்சூர்முதறடிந்தவ்வாய்ந்தொளிர்வே
ன்றியல்விளங்கி, யிருளினைத்துரக்குமுயர்பிரதாபமெய்ந்தெனச்சி
வந்தமெய்ம்முதலை, வெருளினைத்தொழும்பர்க்கசுற்றியாண்டருளு
மெய்ப்பொருடன்னையேத்தவமே. (௪௨)

† துவமிலாவுடலைத்துவமெனக்கொண்டுதொன்முறைமையொழு
க்கத்தைமறந்த, தவமிலாப்பதிதனென்னையாண்டருளுந்தன்மையே
தண்ணளித்தன்மை, நவமிலாவேதமனுக்களாமறையோர்நவிலக்கே
ட்டெழிற்கிளிநவிலு, மவமிலாவளங்கொள்பழநியிற்குடிகொளாண
டலைக்கொடியுயர்தேயே. (௪௩)

உயர்வணப்பழநிபுகந்தமர்கந்தவுனைப்புகலென்றுவந்தடுத்து, ம
யர்வினைதவிர்த்தெற்கருளெனக்கதறுமாற்றமுன்செவிப் புகவிலை
யோ, பயமுறுங்கடல்சூழ்புவியெலாங்காதும்பார்த்திடுங்கண்களும்ப
டைத்த, நயமுறும்பிரமங்குசனெனமறைகணவிற்றிடுமுனைக்குணா
யென்றே. (௪௪)

என்னநல்வரமுந்தொழுதவர்தமக்கிங்கிதமறிந்துதவியால்கின்ற,
பன்னிருகரனைநான்குமாமுகனைப்பகருஞ்சிறைக்க ளத்துறுத்துத்,

† துவம் + இலா - அசையாநிலையில்லாத. (அழிதலுடையதென்றபடி.)

துன்னுமைம்முகற்குப்பிரணவப் பொருளைச்சொல்லியவாறுமாமுக
ளைப், பொன்னுநன்மணியும்பொலிந்துறும்பழநிப்பொருப்பிடைக்க
ண்டுவெந்தனனே. (௩௫)

உவந்துனைவணங்காத்தலையுநின்புகழையுரைத்திடாச்சிகுவையு
ங்*கோளி, லவந்தருபொறியிற்குணமிலவென்றவரும்பொருளறிந்தி
ருந்தந்தோ, பவந்தனைப்போக்குங்கழல்பணியாதும்பன்னுமுன்புகழ்
வழுத்தாது, நவந்தருமெழில்கூர்பழநியிற்பெருமநாள்பலகழித்தனன்
வறிதே. (௩௬)

வறியருக்கிரங்கிப்பிடியனமேனும்வழங்கி டாதுண்டவச்சைய
ஞய்ச், சிறியமாச்சார்ந்துபயனிலபிதற்றித்தீயசெய்துழன்றனனெ
னினு, மறியுடைக்கரத்தோன்மதலையைப்பழநிமலைத்தலைநிலைத்தசெ
வ்வேளைக், குறியிடைக்கொண்டுதுதித்தனன் † கூற்றங்குதித்தலு
மென்கைகூடியதே. (௩௭)

கூடிவண்பழநிப்பொருப்பிடைக்கோயில்கொண்டமர்தண்டபா
ணியையுண், ணுடிடவரியதிருப்புகழ்பாடிநாத்தழுதழுப்பவேதெ
டுத்து, நீடியநயனநீர்த்துளிதுளிப்பநெஞ்சுநஞ்சுருகிடக்கண்ட, பீடி
யன்மனிதப்பிறவியேபிறவிப்பெரும்பயன்பெற்றதித்தலைக்கே.

தலைவளர்பொருள்களனைத்தையுநோக்கத்தண்மைசேர் வெண்
மதிக்கிடர்செய், நிலைவளரமுதமொழிகிளர்வதனச்செம்மதியிரண்
டொன்றேமும், புலைவளரகன்றில்வலைபகிர்ந்தோங்கும்புயமலையா
றிரண்டுடைய, வுலைவளர்பழநித்தனிமுதற்கடவுளொருவனையன்றி
வேறிலையே. (௩௯)

---

* கோளில் பொறியிற்குணமிலவே யென்றதிருக்குறள் போல
வீண்டுங் கோளில் என்பதற்குத் தத்தமக்கேற்ற புலன்களைக்கொள்
ளுதலில்லாத வெனப்பொருள் கொள்ளத்தக்கது.

† கூற்றங்குதித்தலும். என்றது - கூற்றங்குதித்தலும் - என்ற
குறள் போன்றது.

இலையுளையல்லான்மற்றொருதெய்வமென்றளந்திருந்தினன்பழநிக், கலையுணர்புலவநின்கழற்கமலங்கருத்திடைநிறுத்தினன் கலந்தன், மலையினைவலம்வந்தனன்குறையெல்லாம்வகுத்தெடுத்துரைத்தனனெனக்கு, வலை†யருள்புரிககலியுகத்துகந்தவரங்களைக்கொடுத்தளிப்பதற்கே. (உ0)

வேறு.

அளிமலர்ப்பகழியானலைக்கநொந்துளங்
களிமயக்குறத்தமைமறந்தகாமுகர்க்
கொளிவடிவுடையவுன்னுருக்கண்கூடுமோ
தளிமலர்த்தடஞ்சுலாம்பழநிநாதனே. (உக)

நாதமுங்கடந்தொருநான்கெனப்புகல்
வேதமுங்கடந்துயர்விரிஞ்சனாதியோர்
போதமுங்கடந்தமெய்ப்பொருளினொண்மலர்ப்
பாதமும்பழநியிற்பார்த்துய்ந்தே*னினே. (உஉ)

இன்றெனக்கருள்செயாதிருத்தனீதியோ
வுன்றனைக்களைகணென்றுணர்ந்தடைந்தயான்
சென்றினிப்பிறருக்கென்சிரத்தைத்தாழ்ப்பலோ
குன்றிடைப்பழநியிற்குடிகொளெந்தையே. (உஙு)

எந்தையுமென்னையீன்றெடுத்தவன்னையு
நிந்தையில்குருவொடுகிளைக்குந்தெய்வமு
முந்தையினெனக்கலுமுழுதுமென்னுடைச்
சிந்தையிற்குடிகொண்டபழநிச்சேந்தனே. (உச)

---

* இன்னேஎனற்பாலது - இனேயென விகாரப்பட்டது. இதற்கு இன்றேயெனப்பொருள்.

† வல்லைஎன்றது - வலையெனவிகாரமாயிற்று.

சேர்ந்தனைப்பழநியிற்றிகழுஞ்செம்மலைத்
தீந்தமிழ்க்கவிசொலித்தினைத்தலின்றிவீண்
மாந்தரைப்புகழ்ந்தணிவருத்துப்பாடுவோர்
சாந்துணைச்சமனுக்கென்சாற்றுகிற்பரே. (உ௫)

சாற்றரும்பெரும்பவச்சலதிதாண்டவா
ஞேற்றிருங்கடலுடனுடங்கவாடிவேலன்
போற்றரும்பழநிமன்புகழ்ப்பயோததி
யூற்றிடைமூழ்கினேனுறுதிபெய்துமே. (உ௬)

எய்தருமிடமெலாமெய்திப்பொய்ப்பொருள்
செய்துமெய்வருந்துவீர்திகழுமெய்ப்பொருண்
மைதுறும்பழநியம்மலையின்மாணிக்கங்
கைதனிற்கிடைத்திடுங்கண்டுகொண்மினே. (உ௭)

மின்னுமின்னிகர்த்தபொய்மெய்யினேய்கெடப்
பன்னுநன்மருந்துகள்பரிந்துதேடுவீ
ருன்னுறும்பிறவிநோயொழிக்கும்வேட்பெயர்
மன்னுமொண்பழநியின்மருந்தைத்தேடுமே. (உ௮)

மேவுகபழநியைவிரைந்தொண்காவடி
காவுகபுபத்தர்கணாந்துகந்தனைக்
கூவுகசரணெனக்குவலயத்துளீர்
தாவுகபதத்தலர்தொலையுந்துன்பமே. (உ௯)

துன்பினைத்துடைத்துவான்சுரரைக்காத்தவேட்
கன்பினிற்பழநியையடைந்தவன்கழ
லென்புநெக்குருகநின்றேத்துமாந்தரைத்
தென்புலத்தவன்றொடான்றிண்ணந்திண்ணமே. (௩0)

வேறு.

திண்மைசேர்கொடுங்கூற்றுவன்பாசமுஞ்சினமுங்கொண்டடர்ப்பான்வன், கண்மைசேர்கரும்பகட்டிடைவரும்வழிக்கலங்கலென்

றெனைக்காக்க, வொண்மைசேர்வடிவேலொடுகருணையுடன்கொ டிமயிலேறித், தன்மைசேர்பொழிற்பழநியிற்கடம்பசத்தருணத்தில் வருவாயே. (கக)

வாய்ந்தபன்மணிவெயில்செயும்பழநியம்மலையினிற்குமரன்ற
ளாய்ந்தவொண்மலர்ப்பதயுகளங்களுக்கன்புசெய்யடியானா
மாய்ந்துதித்தவொழிந்திப்பிரமேந்திரர்வளர்பதங்களுக்கப்பா
லேய்ந்தவொண்பதத்தவர்களுமேக்கறவிருத்துவளின்பத்தே. (கஉ)

தேமனுண்மலர்த்தும்பையந்தொடையலத்திகழ்தரவணிந்தேற்று
நாமவேலெறிந்தசுரனைத்தடிந்துமுன்னளிமலர்ப்பதம்பூண்ட
கோமனுநியர்ப்†புரந்ததென்பழநியிற்குழகநின்சரண்புக்கேன்
காமமாதியபகைதுமித்தென்னையுங்கடைக்கணித்தருள்வாயே. (கங)

கடைக்கணிவ்வுடல்கழிந்துழிமக்களுங்கழிமகிழ்ந்துனைக்கூடும்
படைக்கவென்னுண்மதிமுகவெழிற்பெண்டிரும்பரிவுடைக்கடும்பாகி
யிடைக்கண்வந்துறுமொருமுன்பின்வரவியையிலரிதுதிண்ணை [நெஞ்சே.
மடைக்கண்வாளைபாய்பழநியின்முருகனையேழ்த்துணைதுணிநெஞ்

செஞ்சமேனளிதுளிக்கிடமாகியசெடும்பசச்சடருண்டி
யுஞ்சுவாழ்ந்திடவேண்டிடிலொருமதியுணர்த்தவல்கருத்தாய்க்கே
ளஞ்சுமாமுகன்மகன்குகன்பழநியிலாணடலைக்கொடியோன்காற்
கஞ்சமேபுணையனவரதமுமதைககருதுகசிரஞ்சேர்த்தே. (கரு)

சிரத்தையோடுதென்பழநியிறகடவுடன்றிருவடித்துணையெண்ணு
வரத்தைவேண்டியபடியுனக்கருண்மெனவருத்துணைத்தனன்பல்கா
மரதைதைநேர்தரவுணர்கிலையவற்றினைமறந்தனையினிமேனீ [ன்
பரத்தைமேவுவதென்னைம்பொறிவழிப்படர்ந்துறங்களிநெஞ்சே.

களிகொண்மாந்தரின்மடந்தையர்கண்களைக்கமலநன்மலர்வேல்
வா, ளளிகள்சேல்களொன்றுணைத்தவர்மையலினலைந்துழன்மடநெஞ்

† கோமனுநியர் - இந்திராதிதேவர்.

சே, விளிகொள்காந்தையர்ரூன்றதுங்கிணைசொலும்விழியெலும்புக
னோக்கி, நளிகொள்வேட்கைநோயொழித்தொருபழநியினாயகன்கழ
ல்வேண்டே. (௩௮)

வேண்டுமென்பருக்குவப்புறவரைவர்வேண்டியதிருக்கோலம், பூ
ண்டுசென்றயர்வரங்களைக்கொடுத்தருள் பொழிந்துடன்புரக்கின்ற
நீண்டுயர்ந்தொளிர்பழநியம்பொருப்பனைநினைக்குமென்றனிநெஞ்ச
மீண்டுமற்றையதேவரைக்கனவிலும்விரும்புமோவிரும்பாதே.

விரும்புநெஞ்சினிற்குடிகொளும் பழநியில்விமலனின்பெற்றி
மையைச்,சுரும்புணும்புயத்திறைகொளுமிறைவனுஞ்சுருதியாயிரத்
தாலாய்ந், திரும்புணெஞ்சுறவின்னமுழுணர்கிலனென்பரேற்றெளி
வில்லாத், துரும்புநேர்வருஞ்சிறியன்யானெங்ஙனந்துணிந்துரைத்
திடுமாறே. (௩௯)

மாற்றுயர்ந்தபொற்பணியணிந்தகங்கவர்மலைமுலை†தனங்காட்டி
க், கீற்றுவெண்மதியொளிநுதற்றிலகித்துக்கிளர்நகைமுகங்கோட்டி
க், கூற்றுநேர்விழித்துணைகொடுமருட்டிடுங்கோதையர்க்குடைந்தே
ற்கும், போற்றுவோர்க்கருள்பழநியிற்குகவருள்புரிசரண்புகுந்தே
னே. (௪௰)

வேறு.

தேனேபருகத்தெவிட்டாவமுதே
மானேயெனும்வாள்விழிமான்மகளிர்
கோனேபழநிக்குகஞானிகள்காண்
போனேயரனார்‡பொருளேயருளே. (௪௧)

அருள்வாரிதியேயமர்செம்மணியா
விருள்வாய்பதுமமெழில்வாய்த்தலரும்

---

† தனம் - தனனம், என்பதன் விகாரம், கொஞ்சமெனப் பொருள். ‡ பொருள் - பிள்ளை.

பொருள்வாய்பழநிப்பொருப்பார்கணியே
தெருள்வாரவையேதெளியேற்களியே. (௩உ)

களித்தான்றனைக்காரணங்காட்டுதெனீர்க்
குளித்தான்றனைத் *தீக்கொடுதேடுதலென்
றொளித்தானிலையெற்குலகின்மயல்சேர்த்
தளித்தான்பழநிக்குகன்வந்தடுத்தே. (௩௩)

அடுக்காப்புகழ்பல்லவுரைத்தடுத்தே
கொடுக்காக்கலர்பாற்கொடுவென்றிரவா
மிடுக்காக்குகவெற்குவிரைந்துகுக
தடுக்காப்புகழ்கூர்பழநித்தனமே. (௩௪)

தனமேயுறுதிப்பொருளித்தரணிக்
கினமேலுலகொன்றிலையென்றுகொளும்
மனமேயுனக்கம்மயல்சேர்த்தருளு
மனமேய்பழநிக்கிறையங்கடையே. (௩௫)

அடையாரிவரங்கவர்நண்பினரா
† விடையாருவரென்றுகொளாதெவரு
முடையாரெனையென்றெணுமோங்குணர்வைக்
கொடையார்பழநிக்குகநல்குவையே. (௩௬)

வையந்தனிலுற்பவிப்பான்மைதல்
செய்யின்பழநிச்சிலம்பாவெளியே
னுய்யும்படியின்னுடைமைக்கெழுதென்
கையும்முனையுங்கருத்தும்மினியே. (௩௭)

---

* தீ - என்றது - களித்தானைக்காரணங் காட்டுதல் என்ற குறளிற்போல ஆகுபெயராலீண்டு விளக்கினை யுணர்த்திற்று.

† இடையார் - சொதுமலர்.

இனியேனுமெனைக்கிரங்காதிருந்தா
லனியாயமிதென்றறையுந்தனைமூக்
கனியேயப்பழநிக்கருணைக்கடலே
யுனியேயருள்செய்யுகந்திப்பொழுதே. (சஅ)

பொழுதோர்ந்தறியாப்பொழில்சூழ்பழநிப்
பழுதேதுமிலாப்பரம்பின்றலைவா
தொழுதோர்முறைநின்றுணைத்தாள்பரவ
வெழுதாத்தலையோரெவரும்பதரே. (சகூ)

பதரொத்தலகெங்குமிகப்பரந்தே
யுதரத்தினையேவளர்த்துன்பொருட்டா
மிதரத்தொழில்செய்திலன்மால்பழநிக்
குதரத்தலைவாவருள்செய்குவையே. (ரு0)

வேறு.

குவையாநிதித்திரளைக்கொடுக்காமற்புதைத்துவைக்கு
நவையாருமாந்தர்களேநாவடக்கிவிக்குள்வரிற்
† சுவையாரும்புளிவிளவின்காயாகுஞ்சொன்னபொரு
ளவையாவும்பழநிமலையடிகளுக்காக்குதிர்முனமே. (ருக)

‡ முன்னுமெளியேனுளத்தின்முகங்களிருமூன்றொடுகை
பன்னிரண்டுமொளிவடிவும்பலமுறையுந்தோற்றியுடன்
மின்னிகர்ப்பவொளித்திடுமுன்வித்தையிதெனப்பொழுது
மன்னியருள்பொழிபழநிமலைமுருகநம்பினனே. (ருஉ)

நம்பிரியப்படும்பொருளைநவுந்தமிழைக்கேட்டளிப்பா
னம்பிரியப்படுமுகிற்நல்லகப்பழநிக்கிறையிருப்பக்
கம்பிரியப்படுகளத்தக்கடம்பனைவிட்டிழிநராத்
கம்பிரியப்படிபுகழ்ந்துதகையிழப்பர்சழக்கினரே. (ருங)

---

† சுவையாரும் புளிவிளவின் காயாகும் என்றது பொன்னும் புளிவிளங்காயாம் என்றாற்போன்றது. ‡ முன்னல் - நினைத்தல்.

சழக்குறுமிப்பிரபஞ்சத்தனிவந்துன்குழந்தையெனை
யுழக்குறுமைம்புலவேடர்க்குறக்காட்டிக்கொடுத்தொளித்தாய்
குழக்குறுமக்களைப்பயந்தகுரவருக்கிக்கொடுமையடா
திழக்குறும்பொய்ம்மொழிப்பழநிக்கெந்தையெதிர்த்தருண்முறையே

முறையீடுகேட்டெனதுமுழுக்குறையுந்தீர்த்தருளத்
தறையீடுசொலவரியதடம்பழநிக்கடம்பாவொண்
சிறையூடென்கருங்கணுடைச்சிகியிலிவர்ந்திருபுடையு
நறையூடுமொழிமகளிர்நண்ணவரவென்றுரையே. (௫௫)

உரைக்கரியதிருப்புகழையுரைத்துரைத்துன்றிருவுளத்தைக்
கரைக்கவுமென்பொருட்டஃதுகரையாதபரிசென்னோ
பரைக்கொருமைந்தாபழநிப்பண்ணவனேநீயிறைகொள்
வரைக்குலத்துளொருவரையோநின்மனதும்வகுத்தருளே. (௫௬)

வகுத்தானைபுலகனைத்தும்வரைபகிர்ந்துதாரகனைச்
செகுத்தானைக்கொடுநரகிற்சினந்திருந்துந்தொழும்பினரைப்
புகுத்தானைக்கலையுணர்ந்தபுலவனையென்னிடத்தினரு
டொகுத்தானைப்பழநிமலைத்துரையையினிமறக்கிலெனே. (௫௭)

மறம்பயிலும்வாட்கணிமவரைக்கரும்புதருமுத்தை
யறம்பயிலும்யோகியர்நெஞ்சகத்திலொளிர்மணிவிளக்கை
நிறம்பயிலுமயிலிவருநெடும்பழநிமலைமுருகைத்
திறம்பயிலுந்தொல்வினைநோய்தெறுமருந்தைத்துதிப்பேனே.

துதிக்கருநற்புகழ்க்கடற்றுத்தலங்குறுபன்னிருகட்டு
மதிக்கருமொண்சிகிமேற்றென்மனத்திருக்கும்பூந்தாட்டுக்
கொதிக்குமொளிரிலைவேற்றுக்குக்குடஞ்சேர்கொடியுடைத்தப்
பதிக்குளுயர்திருப்பழநிப்பருப்பதத்திற்செழுந்தேனே. (௫௯)

செழும்பொழில்விண்ணுலகளக்குந்தென்றிருவாவினன்குடியிற்
கொழும்புவிமக்களுக்கருளக்குடிகொண்டகுருமூர்த்தி
தொழும்பினருக்கெனவெனக்குந்தோமிகுமிச்சகமயக்கில்
விழும்பரிசுதடுத்தளிக்கவிரைந்தெழுந்ததற்புதமே. (௬0)

வேறு.

* தமரக்கடலுண்டெமிழ்முனிக்கேதமிழ்த்திங்கடலும்புகட்டியகோன்
குமரக்கடவுள்பழநிமலைக்குறமான்முலைக்குங்குமமார்ப
னமரர்கதிபன்றிருவடிநெஞ்சகத்திற்கருதாதாயுளோவீண்
கமருக்கிறைப்பார்போற்பலவுங்கருதிக்கழிப்பார்கடையாரே. (கக)

யாரைக்கலந்தோகுறையிரப்பலிரத்தக்கவனுநீயிருப்ப
நீரைக்கொடுமாவினுக்கெனவுநிலத்திற்பிறர்பானிகழ்த்தறியே
னூரைப்பொழில்சூழ்பழநியைமிக்குவந்தோய்தண்டாயுதபாணி
பாரைப்புசித்தோனெழின்மருகாபரிந்தென்குறைதீர்த்தருள்வாயே.

தீர்த்தத்துயர்சண்முகநதியிற்றினமும்படிந்துசெழுமலர்கள்
பார்த்துப்பறித்துக்கொணர்ந்தவற்றைப்பரிவோடாய்ந்துபலவிதமா
யார்த்துத்திருவாவினன்குடியிலழகார்குழகன்றிருவடிக்குச்
சார்த்தக்கொடுக்குந்தொழும்பினனைச்சாரான்மறலிபாரானே. (கங)

பாருக்கிடுக்கணொழித்தளிக்கப்பருமாமணிப்பூண்பாண்டியனுய்ப்
போருக்கடுக்குங்கருங்கடலைப்பொருவேல்விடுத்துப்போக்கியவுன்
னீருக்கடுக்கவெனதிடும்பைநெடுங்கார்க்கடலுந்தொலைத்தளிக்க
மேருக்கடுக்கும்பழநிமலைவிமலாகரங்கொள்வேற்படையே. (கச)

படைக்குந்தொழிலைப்பிரமனுக்குப்பழக்குங்கடவுள்பழநிமலை
யிடைக்கும்பமுனிக்கருள்புரிந்தவிலைவேற்கரத்தோன்றிருவடிநின்
னடைக்கும்பிறர்நோய்கண்டிரங்கிநயக்குங்கொடைக்குமுன்றனக்குக்
கிடைக்குங்கிடைக்குங்காத்திருநீகெடுப்போர்மதிகேட்கிறநெஞ்சே.

சேவையுகைக்குந்தனிச்சரபஞ்சிகிவாழ்சிமையத்திமயமலைப் [ஞ்
பூவைமொழிமான்விழிப்பிடியைப்புணர்ந்தீன்றெடுத்தவிளஞ் †சிங்க

* தமரம் - ஒலி. † பிறப்பிறப்பைக் கொடுக்கின்ற மாயையை யானையெனவுருவகப்படுத்தினதற்கேற்ப முருகக்கடவுளைச் சிங்கம் எனவுருவகப்படுத்தியது.

சாவையுயிர்க்குப்பிறப்பெனுநோய்தன்னோடளிக்குமாயைமத
மாவையழித்தாண்டருள்புரிவான்வாழும்பழநிமலைதனிலே. (௬௬)

மலையிற்சிறக்குஞ்சிவகிரியாமலைமேற்பழநி * வள்ளலுனை [கோ
† யிலையிற்சிறக்குமிடைக்கொடியோடிபஞ்சேர்தரு வென்றியம்பிடு
தலையிற்கலையோன்புகன்றபடிதருவிற்பழநீயெனப்புகல்கோ
கலையிற்றலையோயெவ்விதமிக்கடையேனுரைத்துப்புகழ்வதுவே.

புகழ்ப்பிறர்கண்டெனையுனையேபோற்றிப்பணியும்புண்ணியர்போ
லிகழத்தகுநான்பொய்வேடமெடுத்துநடித்தேனிவ்வொழுக்க
நிகழத்தெரிந்தனைக்கொளிக்குநீர்மையுணரேன்சூர்மயிலாத்
திகழப்பணிகொள்பழநிமலைத்தேவாபொறுத்தாடிருத்தகவே. (௬௮)

திருமான்கலைமானுடன்குடிவாழ்சீர்சால்பழநித்திருமலையி
லொருமான்பயந்தகுறக்குலமானுள்ளஞ்சிவக்கமுடிசிவக்கும்
பெருமான்சிறியேனபதியெனப்பிறங்கும்வலையிற்பிடிபடவுங்
கருமான்மிகுக்குமாயையெனுங்கைம்மான்முதுகுகாட்டியதே.

காட்டுக்கிறையின்றிருமருகாகனகசபைக்கண்கவுரிமகி [ன்
னாட்டுக்கிறையினெழிற்புதல்வாவவுணர்க்கிறையையழித்துயர்பொ
னாட்டுச்கிறையின்றுனிதவிர்த்தோய்நலஞ்சேர்பழநிநகாக்கிறையெ
பாட்டுக்கிறையுமனமிரங்காப்பரிசென்விளைந்துபகர்வாயே. [ன்

பகரரியதுன்பமுறுந்தமியேன்றன்னைப்பார்த்தருளத்திருவுளத்துப்பரிவுகொண்டு, புகரரியபழநிமலைப்புலவாவந்தப்பொருப்பிலிருந்தொருமுறைநீபுறப்பட்டென்க, ணிகரரியசிகியிவர்ந்துவந்தாலுன்றனிசுழ்ந்தரிய பெருந்தகைமைநீங்காதிந்த, நகரரியநுந்தையுமுன்னுவலூரன்றறமிழ்க்குத்தூதாகிநடந்தானன்றே. (௭௧)

---

* பழம் - நீஎன முருகக்கடவுளைச் சிவபெருமான்சொன்னார். என்பது - தலபுராணத்திலுள்ளது - கலையிற்றலையோய் என்றது. கலைபுணர்புலவன் என்றாற்போல்வது.

† இலையிற்சிறக்கு மிடைக்கொடி - வள்ளியம்மை - தழையையுடுப்பது குறவருக்கியல்பு இபம் - தெய்வயானையம்மை - தலையிற்கலையோன் - சிவபெருமான்.

நடந்தருபொன்னளினமலர்க்காலன்பாலனூற்கோட்டுக்கரிவளர்த்தநலஞ்சேர்பைம்பொற், கடந்தருநற்குயத்தியொடுகுறத்தி காமக் கடல்கடக்கப்புணையாகக்கற்றோளீந்தான், மடந்தருமிச்சகமயக்கவிருளைமாற்று மணிவிளக்கென்றுரைத்தகுதன்மலர்த்தாள்சேட்கிற், றிடந்தருவனுனக்கொளியானெஞ்சேநீபோய்த்தென்பழநி மலையிலவன்றிறத்தைநாடே. (எ௨)

நாடருமிவ்வுலகத்துக்காணப்பட்டுநசித்தலுறும் பொருள்களின்கணனியுண்டாகும், பீடருமென்மனத்தாசைப்பேயைப்போக்கப் பேராசைகொண்டனனைப்பேறுநல்க, வீடருமுன்றிருவுளத்திலிரங்கவேண்டு † மிணைவிழைச்சினிடைவிரலுக்கிடுபொற்பூண்பின், கூடருமப்பொழுதுகரத்தொடியாங்கொள்ளுங்குலமகளிர்வளர் பழநிக் குமரவேளே. (எ௩)

வேளையிதுதனிற்சிறிதுவிழியாளுக்கவேண்டுமெனப் பல்விதமும்வேண்டிக்கொண்டுன், றாளைமுடிக்கணியாக்குந்தமியேன்மாட்டுத்தன்னமுமுள்ளிரங்காததகையீதென்னே, வாளைமலர்க்கயங்குடையுமகளிர்க்கஞ்சிமருண்டுகுதிகொளத்தாக்கிவளர்பூம்பூகப், பாளைகிழிந்துதிர்தரளம்பணிலமீன்ற பருமணியிற்கிடந்திமைக்கும்பழநித்தேவே. (எ௪)

தேவளருந்திருக்கோட்டஞ்சேர்வாயென்றுசெப்புமுன மனக்கோட்டஞ் சேர்வல் ‡வேட்பேர்க், கோவளரும்பறம்பினைப்போய்க்கூடுகென்றுற்கோதையர்தங்குயத்தினையேகூடப்போவேன், றாவளரும்வேற்கையுனைத்துதியேனின்னேதோ முடையேற்கெங்ஙன்முன்றுணைதாள்கிட்டு, மாவளருந்தொழுத்தோறுமமுதஞ்சிந்தியாறெதிர்க்கும்பழநியின்கணமருங்கோவே. (எ௫)

கோவென்றுகடும்பினர்முன் குரவிட்டேங்கக் கூற்றுவன்றன்ளெழிின்முடிக்கக்கூடும்போழ்திற், பூவென்றுசொலத்தகுநின்பொற்றாளுக்கென்புந்திதனைச்செலுத்தவருள்புரிகசூர்ப்பேர், மாவென்று

---

† இணைவிழைச்சு - நாயகன் புணர்ந்துற்றகாலம்.

‡ வேட்பேர்க்கோவளரும் பறம்பென்றது - முருகக்கடவுளெழுந்தருளி யிருக்குமலையெனவு மன்மதன் வீற்றிருக்கு முலையெனவுஞ் சிலேடைப் பொருட்டு.

வானவருக்கமரரென்றுவழங்குபெயர்தனைப்புரந்தமலைத் தோளைச்சேர்ந், தேவென்றமிளிர்விழிபொய்யிடைவாய்செய்வயானை மகிழ்கொளும்பழநிக்கிறையாமேறே. (எக)

ஏறுகைக்குநுந்தையுடனெதிர்த்தவ்வீசனின் கவியையிசழ்ந்தவன்பண்டிழைத்தநூற்குக், கூறுகைக்குமுன்மகிழ்ந்தோர்குகையுட்பல்லோர்குழுவொடவன்றனைப்புரந்தருணக்குன்றேயீ, ராறுகைக்குமரகுருவேயடியேன்சொல்லுமருந்தமிழுக்கிரங்கியருளளிக் காமற்கைகம், மாறுகைக்குநன்கொடையார்மருவிவாழும் வண்பழநித்தலைவாவாளாவதிதலென்னே. (எஎ)

வதிதனிலொண்டிரைக்கரத்தின்வாரிவாரிமணியிரைத்துத்திடராக்கும்வளஞ்சேர்செந்திற், பதிதனிலும்பிறைதவழும்பரங்குன்றத்தும்பழமுதிர்தண்சோலைவளர்பறம்பின்கண்ணுந், ததிதனிற்பத்தருக்கருளத்தக்கதென்றுசாற்றுதிருவேரகத்துஞ்சைலந்தோறுநதிதனிற்சந்தனத்திஞெறெனாறுநந்திருவாவினன்குடிக்கோனண்ணுந்தானே. (எஅ)

தானையிடைக்குடுக்காமற்றலையோடாதிதகையில்பொருளணிந்துநடந்தருநுந்தைக்கு, மானையுறழ்விழிப்பரவைமகிழநன்சொற்றுவழங்கிவரும்பித்தனெனுமணிப்பேரேற்கு, மோனையுறுதமிழ்க்கவிதைமொழியும்பொய்யாமொழிப்புலவனினக்குமுனமுட்டையென்றே, யேனையநற்பெயர்கள்பலவிருப்பச்சொன்னதெதுகருதிப்பழநிமலைக்கிறைவசொல்லே. (எக)

சொல்லையமுதிடைக்கொண்டதோகைபாகன்றேன்றலைத்தென்பழநிமலைச்சோதிதன்னை, முல்லையொடுகோங்கிரண்டுமெழுகிழ்த்துச்செய்யமுளரியிடைக்கிடையலர்ந்துமுன்னுளேனற், கொல்லையிடைவளர்தவள்ளிக்கொடியாற்புல்லுங்கொழுங்கனியைச் செழுங்கனியைக்குகப்பிரானை, வல்லையிலன்பினர்க்கருளும்வள்ளறன்னைமறவாதமாந்தரினிப்பிறவார்தாமே. (அ0)

வேறு.

பிறப்பிஞெடிறப்பலைகள்பெற்றியினலைப்பு,
விறப்பவுமலக்கணுறமெற்கருளநீயே.

மறப்பினினியெத்திறமுய்கிற்பலுமாமாணச்
சிறப்பினொடுபூசைகொடிருப்பழநிவேந்தே. (௮௧)

தேகமொருமூன்றநனிசேர்ந்துணரினங்கே
யேகமெனநிற்குமொளியெங்கள்பழநிக்கோன்
றோகைமயில்வாகனுயர்சுப்ரமணியன்றன்
போகமொடுமுத்திதருபொய்யிலொருதேவே. (௮௨)

ஒருத்திமுருகாவெனவுரைத்தளவிலன்றுள்
பெருத்தகவிடர்தீர்த்தருள்செய்பெற்றிமையையுன்னி
யருத்தியொடுநின்சரணடைந்தனனமன்பின்
வருத்துழியொழித்தருள்கவண்பழநிவாழ்வே. (௮௩)

வாழ்ததநினதொண்புகழ்மணிப்பதமலர்க்கீழ்
தாழ்த்தமுடிபத்தியொடுசெந்தசமுநின்ன
கேழ்த்தவடிவங்கருதநற்பெயர்கிளத்த
வீழ்த்தகொடுமைப்பழநிவேலவரநல்கே. (௮௪)

நல்குரவினூற்றுயரநண்ணுசலகற்றிப்
பல்குரநிதித்திரள்பரிந்துதவுமுள்ள
மொல்குரவடுத்திடுமுடற்பிணியொழிக்கு
மல்குறுவளப்பழநிவள்ளல்பணிவோர்க்கே. (௮௫)

கேட்டவரமீயவலகேடில்பழநிக்கோன்
வாட்டமறுகந்தனிகர்மற்றுமொருதெய்வங்
காட்டவலிரேன்மலடிகான்முளையைநந்த
நாட்டமுனர்நற்புலவிர்காட்டவலெனே. (௮௬)

நாவெனனசெனுந்தொடர்புனைந்திடவெலாநீ
தாவெனவுணர்ந்தமையவென்றருளல்சாற்றாய்
மீனெனவருட்கணாறு † மென்மயிலிரண்டு
வானெனமகிழ்ந்தணையும்வண்பழநிமன்னே. (௮௭)

மன்னரனைவோர்தமையும்வன்சமரில்வென்ற
பன்னரியமொய்ம்புடையபார்த்திபர்தமக்கு

† மென்மயிலிரண்டு என்றது - வள்ளியம்மை தெய்வயானையம்மையை.

நன்னர்பழநிக்கண்வளர்நாதனருளின்றே
லின்னல்புரிகூற்றுவரினில்லைவெலுமொய்ம்பே. (௮௮)

பேதைமையினானனிபெரும்பிழைசெய்தேன்பா
றீதறுகடைக்கணருள்சேர்த்தபழநிச்சேய்
பாதகமியற்றபனவற்கருள்பகுத்த
தாதையரனிற்பெரிது தண்ணளியுளானே. (௮௯)

உள்ளபடிசொல்வதிதுவுன்றிருவடிக்கு
மெள்ளளவுமன்புசெயலென்றமிலெனென்னை
யள்ளனரகத்திடையமிழ்த்தலொழிபின்னர்
விள்ளருமெழிற்பழநிவேந்தபுகனீயே. (௯௦)

வேறு.

நீயேபுரப்பையெனவேறுதெய்வநினைவற்றிருக்குமெளிய
நாயேன்குடும்பநனிநோயினாளுநலிவெய்துகின்றதழகோ
வேயேநிகர்ப்பவுயர்தோட்கிடைக்குமிளிர்மின்னிகர்க்குமலைமான்
சேயேசிறந்தபழநிக்கணோங்குசிமிலத்திலுற்றமணியே. (௯௧)

மணியேமணிக்குளொளியேயுயர்ந்தமறையிற்குறித்தபொருளே
கணியேகணிக்கவருநல்லருட்கோர்கடலேகடற்குளுலகி
னணியேயெனச்சொல்பழநிக்கண்வாழுமரசேநினைத்துனடியிற்
பணியேன்புரிந்தவதிபாதகங்கள்பலவுந்தவிர்த்தருளே. (௯௨)

அருவேவிளங்குமுருவேயினிக்குமமிழ்தேயெவர்க்குமறிவே
தருவேதருக்கொள்கனியேபுதைத்தனமேயரற்குமுனமேய்
குருவேகவின்றபழநிக்கியைந்தகுமராகுறிஞ்சியமரா
கருவேதனைக்குமிகவும்பயந்தகடையேனையாளமதியே. (௯௩)

ஆளாகிநின்னசிறுதொண்டியற்றியறியாதபொய்யனெனினு
மீளாதகாதலொடுநின்னைநாளும்வினையேன்வழுத்தவிலையோ
வாளாவிருத்தலழகோவருட்குமயிலேறியாளவருவாய்
கேளாதுநல்குபழநிக்கணேய்ந்தகிரியிற்கலந்ததுணையே. (௯௪)

துணையேவளங்கொள்பழநிக்கண்முன்புதுகடீரிடும்பணிமய
வரையேநிகர்த்தபுயமீதுகாவிவருமாமலைக்கண்வதிவோய்

விரையேய்கடப்பமலர்மாலையேய்ந்தவிகிர்தாபுரப்பலெனவோ [யே
ருரையேயெனக்குன்மணிவாய்களாறுளொருவாய்திறந்துமொழி
மொழியாமழைவென்றகுறமாதுகேள்வன்முருகேசனூழிதனினு
மழியாமலோங்குபழநிப்பொருப்பிலமர்வோன்சிவந்தபதமே
யொழியாமனாளுநினைவாயடைந்தவுறுகண்சடக்கவுலகில்
வழியாதுமின்றிமிகவுங்கவன்றுமயர்வெய்துகின்றமனமே. (௯௬)

மனமெய்திருந்தியறமாக்கலன்றிமறநாளுமாக்கியுனது
மூனமெய்தியினறுபுகழ்வோனையாளன்முறையல்லதென்றுநினைவெ
சினமெய்தியேசுபவர்யாருமில்லைசிறியேனையாள்கவலி [ஞ்
லனமெய்தியோங்குபழநித்தலத்திலமர்கின்றவாறுமுகனே. (௯௭)

முகமாமதத்தகரியிற்பிறங்குமுதல்வற்கியைந்தவனுசா
நிகமாகமங்கள்பலவற்றினுக்குநிலையேகுணத்தினிலையே
னகமார்நலங்கொள்பழநிக்கிரிக்கண்வளர்வோயடுத்துமுனையிச்
சகமாயையினைகண்முழுகிக்கிடந்துதமியேன்றயங்கறகுமே. (௯௮)

மேவார்புரத்தைநகைசெய்தெரித்தவிமலன்பயந்தபுதல்வா
பாவாணருற்றகழகஞ்செறிந்தபழநிச்சிலம்பமுறையா
னூவாலுயர்ச்சிபெறுமாறெழுதனைதநவிலாதபாவியெனையு
மோவாதகத்திலருள்கொண்டுகாத்தலுனையேபொறுத்தகடனே.

கடமாமுனிக்குநிகர்வோருரைத்தகவிபல்லகேட்டசெவியான்
மடமாரகங்கொள்சிறியேன்பகர்ந்தவழுவானிறைந்தபனுவ
லடமாருளத்தின்மகிழ்கொண்டுகேட்டதமிழ்நூற்கருத்தனிடைநற்
றிடமார்வரங்கள்பழநிக்கணார்ந்துதினமேற்றுவாழுமுலகே. (௱)

## பழநிப்பதிற்றுப்பத்தந்தாதி

முற்றிற்று.

ஷண்முகநாதன் சரணம்வாழ்க.

# சித்தாந்தவசனபூஷணம்.

இந்ஞானசாஸ்திரமானது வேதாகமசாரமாய் விளங்குவதும், திருவருட்பெருஞ் செல்வர்களாகிய விவேகாதி சர்வசாதன சம்பந்நரான நிஷ்காமாதிகாரிகள் அநுபவிப்பதும், சுத்தாத்துவித சித்தாந்தவுண்மையினை வுள்ளங்கை நெல்லிக்கனிபோலெடுத்துக்காட்டுவதுமாகிய உண்மைஞானத்தினை, பதியிலக்கணம், பசுவிலக்கணம், பாசவிலக்கணம், சத்தசத்திலக்கணம், தசகாரியவிலக்கணம், அவத்தையிலக்கணம், உணர்த்துமுறையிலக்கணம், தீக்கையிலக்கணம், சாதனவிலக்கணம், ஞானவிலக்கணம், ஞானிகளிலக்கணம், அத்துவிதமுத்தியிலக்கணம் எனப் பன்னிரண்டு வகைகளால் விவகரித்து, தெளிவான வசனரூபமாகச் செந்தமிழ் நடையில் ஏது திருட்டாந்தபூர்வகமாயும், ஆட்சேப சமாதானங்களுடனும், பரபட்ச சுபட்சமாயும் எழுதி யச்சிடப்பட்டுள்ளது. மனிதப்பிறப்பை யெடுத்ததனா லடையவேண்டிய முக்கியப்பிரயோசனம் இச்சாஸ்திரத்தினா லடையலாமென்பதிற் றடையில்லை.

இதன் விலை ரூபா - க. வி. பி. சார்ஜ் [illegible] - ௩ - ௦.

பூவை - சிவபூஜை[illegible]யார்,
34 - முத்தமுத[illegible]
தெரு வீதி, சென்னை

உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

திருக்கைலாசபரம்பரைத்

திருவண்ணாமலையாதீனத்துப்

பிரதமசற்குரு மூர்த்தியாகிய

ஸ்ரீமத். தேவசிகாமணி தேசிகர்மீது

அவ்வாதீனத்து

ஸ்ரீ குமாரசுவாமி முனிவரால்

அருளிச்செய்யப்பட்ட

# ஞானவந்தாதியும், நான்மணிமாலையும்.

இவை

ஷை ஆதீனத்து

ஸ்ரீமத். ஆறுமுகதேசிக சுவாமிகள்

கட்டளையிட்டருளியபடி,

யாழ்ப்பாணத்துப் புலோலியம்பதி

ம. தில்லைநாத பிள்ளையால்

பரிசோதித்து

சென்னபட்டணம்:

கலாரத்நாகர அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டன.

சர்வசித்து௵ வைகாசி௴ 1887

உ

சிவமயம்.

# சிறப்புப்பாயிரம்.

திருவாவடுதுறை யாதீனவித்துவான்

## ஆறுமுகசுவாமிகள்

இயற்றியருளியது.

கல்லாலின் மோனமுற்றன் றெல்லாமு முணர்ந்தவர்க்குக் காட்டு மொன்றைத், தொல்லாக மத்தடைவே பல்லாரு நன் குணரச் சொல்வானெண்ணி, மல்லாரு மதில்புடைசூழ் திரு வண்ணு மலையிலருள் வடிவொன் றேந்தி, நல்லார்கள் தொழப் பொலியுந் தெய்வசிகாமணிக் குரவர் நாதன்றுளில். (க)

மனமொழிமெய் யவனடிக்கே யுறுத்தியரு ளொருங்குபெற்ற வரதன் சைவத், தனமெனுஞ் சித்தாந்தகலை தெளிந்திட்டை கைவந்த தகையனேட்டிற், கனமுறு பொன்னுங் கருதுந்துற வின ஞரியனையன்றிக் கனவினும்வே, றுனமருவா வுளக்குமார சாமிமுனி வரனெமக்கு முறுதியோர்ந்து. (உ)

உளநிறைந்த சிவானந்த முவட்டெடுத்து வழிந்ததென வுரை ப்பதன்றி, வளநிறைந்த வேறுவமை யாமெடுத்துப் புகலவொ ணு மகத்துவஞ்சால், களநிறைந்த பிறந்தையறுத் திடுஞான வந்தாதி கருதுவாருட், குளநிறைந்த நான்மணிமாலையுஞ் சாத் தியருட் புணரி குளித்தானன்றே. (ங)

அன்னவற்றி னருணயமும் பொருணயமுஞ் சொன்னயமு
மார்ந்து தேக்கி, மன்னுலகிற் புலவர்களும் புதுவிருந்தாச் செ
விவாயான் மாந்துமாறு, தன்னிகரிலனைய தெய்வசிகாமணி தே
சிகன்மரபு தனக்கோர் பானு, வென்னவுரை தரவமாவோன்
கருணையொரு வடிவெடுத்தா லேய்க்கு மெய்யான். (௪)

எத்தகைவாய் வல்லவரும் வார்த்தையொன்றி னுளமுருக
வினிதுபேசு, முத்தமனற் கொடையினரின் முன்னிற்போ ரவ
ன்கரத்தா லுணர்மாணுக்கர், தத்தருவிக் கொடுங்குன்றத் தமா
ந்தெதிர்ந்தோர் வினைசாடுஞ் சதுரன்ஞான, வித்தகனல் லாறு
முக தேசிகனைச் சிடுவித்து விளக்குகென்ன. (௫)

அன்னவன்கட் டளைசிரமேற் கொண்டெழுத்துப் பிழையற
நன் குராய்ந் தென்று, மின்னறவி னெழுதாத வெழுத்தினியை
வித்தனன்மற் றிவன்யாரொன்னி, லென்னவள முலகினுள வ
வைமுழுது மொருங்கியைந்த யாழ்ப்பாணத்து, மன்னுபுலோ
லியம்பதியிற் கார்காத்த வேளாளர் மரபில்வந்தோன். (௬)

இலக்கியமு மிலக்கணமும் வரம்புகண்டோன் ஞானகலை யெ
ளிதிற் சங்கை, விலக்கியறிந் தவன்புலவர் மெச்சிடநற் பிரசங்
கம் விரித்துச் செய்வோ, னலக்கியைந்த நல்லொழுக்கு மெமக்
கியைந்த பெருநட்பு நன்றுவாய்ந்தோன், வலக்கியைந்த புகழு
லகி னிறுவுதில்லை நாதநா வலவன்றானே. (௭)

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# ஞானவந்தாதி.

---

## காப்பு.

பாரதந்தந்துசெய்தேவசிகாமணிபாலருணைப்
பாரதந்திகழ்ஞானவந்தாதியைப்பாடுதற்குப்
பாரதந்தனைக்கொண்டுபொன்மேருவின்பாலெழுதிப்
பாரதந்தருண்மால்யானைக்கன்றைப்பரவுதுமே.

## விநயம்.

நனியருணசலத்தேவசிகாமணிஞானமதா
மினியசிவாகமசைவசித்தாந்தத்தினையெடுத்தே
தனியனுமோர்செந்தமிழாற்சொல்வேனெனுந் தன்மைகண்மின்
மினியிருள்சீக்குங்கதிரோனைக்காட்டும்விதமொக்குமே.

---

## நூல்.

பூமேவுதாமரைப்போதொன்றுமேருப்பொகுட்டிலங்கண்
மாமேவுதாதுடுவாயல்லிபூச்சக்ரவாளவெற்பாய்ப்
* பாமேவுதேன்புடைபாய்ந்தாலும்விள்ளப்பயப்பட்டதோ
தேமேவுபூவடிக்கண்ணுமெய்த்தேவசிகாமணியே. (க)

ஏர்கொளண்ணுமலைத்தேவசிகாமணியேவளர்த்த
வார்கொள்பைந்தோட்டத்தொருசினைவாழைமடலெனச்சூழ்

* பாமேவுதேன்—சிவாகமம்.

சீர்கொளண்டம்பதினுறுண்டுபோர்முன்சிவாந்தமுத்திச்
சார்கொள * மூன்றுமுந்நூற்றறுபானற்சமயிகட்கே. (உ)

கட்கினிதாமருணசலத்தேவசிகாமணியே
யுட்கொள்சித்தானசிவசமவேதையென்றுள்ளதொரு
திட்பமெய்ஞ்ஞானமெனுமாதிதிவ்யசிதாகமமே
நட்புடையாதிதிவ்யசெடாகமநண்ணியதே. (௩)

நண்ணியண்ணமலைத்தேவசிகாமணிநல்கவுறுந்
திண்ணியவாதிபௌதிகமானசெடாகமத்தைக்
கண்ணுறுசாதகர்தம்பரதேகத்திற்காற்று † விண்ணே
டுண்ணிகழ்நாதமுயர் ‡ வாக்கெனவெழுந்தோங்குறுமே. (௪)

ஓங் § காதியான்மிகசெடாகமமென்னுயிரிருந்தை
நீங்காதவந்துபொருந்தழலாயந்நிலைகலந்து
பாங் ¶ காதியான்மிகசிதாகமத்தையிப்பால்விளக்குந்
தேங்காவண்ணமலைத்தேவசிகாமணிசெப்பிடிலே. (௫)

---

* மூன்றுமுந்நூற்றறுபான்=முந்நூற்று அறுபத்து மூன்று என்க. அது, "முந்நூற்றறுபது மூன்றுமெனச் சொலு, மந்நூற்சமயிக ளாலறிவரிதாய்" என்னுஞ் சதாசிவ ரூபத்திலுங் காண்க.

† விண்ணோடுண்ணிகழ் நாதம் = வியோம பௌதிகத் தொனி.

‡ உயர்வாக்கு=மத்திமை.

§ ஆதியான்மிக செடாகமம் = தீக்ஷாவான்கள் மனச்சங்கற்பத்தினுல் வியோம பௌதிகத் தொனியோடுங் கிளம்பி மத்திமை வாக்குருபமா யிருதயத்திற் றோற்றுமது.

¶ ஆதியான்மிக சிதாகமம் = ஆதிதைவிகதிவ்ய சிதாகமத்தினுல் விளக்கப்படும் ஆன்மசிற்சத்தி.

செப்பிடிலீனுங்குடிலைநாதத்தையதீனும்விந்து
வப்படிவிந்துவிலம்பிகைதோன்றுமவ்வம்பிகைபா
லொப்பறவாமைபின்சேட்டைரௌத்திரியுண்டருணை
வைப்படியேற்கெனுந்தேவசிகாமணிவாக்குரையே. (௬)

உரைவாமைதுங்கரவோர்தண்டுசேட்டைரவுத்திரிகொம்
பரைமாமதியம்பிகைநான்கவ்வம்பிகைபாலருணைத்
தரைமேவுதேவசிகாமணிநண்ணுஞ்சயைவிசயை
நிரைமேவசிதைபராசிதையோடுநிவிர்த்தியதே. (௭)

தேரோர்பிரதிட்டையோர்சாந்தியிந்திகைதீபிகைபின்
ஞேரோசிகைதகுமோசிகைவியோமரூபையுருத்
தாராவனந்தையனாதையனாசிருதைச்சத்தியே
யேராரண்ணுமலைத்தேவசிகாமணியேவுறுமே. (௮)

ஏவுறுசத்திமண்ணாதிசிவாந்தமட்டெங்குநிறைந்
தோவுறுமிச்சத்தியிலைம்பத்தோரெழுத்துற்பவிக்கு
மேவுறுமக்கரமெல்லாமுற்பத்திவிதமிவையே
நாவுறுசோணைநந்தேவசிகாமணிநல்வன்னமே. (௯)

வன்னமெல்லாம்பதமாம்பதமேவளர்வாக்கியமா
நன்னலவாக்கியமேபொருள்சேர்ந்துநடக்குமன்னுஞ்
செந்நலஞ்சோணகிரீசனந்தேவசிகாமணிசேர்
நன்னலவாக்கியமாகமமாகநடைபெறுமே. (௧௦)

பெறுகாமிகாதிதசாகமமேசிவபேதம்பின்னுங்
குறுகாவுருத்திரபேதம்பதினெண்குழாமறுபத்
தறுபேருங்கேட்டனர்தேவசிகாமணியாலருணை
நறுமாமலர்மணம்போலேவெளிப்பட்டஞானமிதே. (௧௧)

ஞானவந்தாதியுங்கொண்டபுராணஞ்சனாதனமீ
தானபராற்பரந்தம்பதரித்தியஞ்சா[illegible]

சூனியமவ்வியயமேயசலஞ்சுபமருணை
யானீநந்தேவசிகாமணியாஞ்சச்சிதானந்தமே. (௧௨)

நந்தருணாசலத்தேவசிகாமணிநாதபர
மந்திரமாமந்திராதீதஞ்சிற்கனமன்னுசிவ
மந்தவியாபகமப்பிரமேய * மௌபமமா
நிந்திதஞ்சுத்தநிராதாரநிட்களநின்மலமே. (௧௩)

மலமிலண்ணாமலைத்தேவசிகாமணிவந்தருவா
யுலகையுண்டாக்கலிலோர்காலமொக்குமுயிர்க்குயிராய்ச்
செலவிடார்தீர்த்தலினாலேயுடனுயிர்ச்செய்தியொக்கு
நிலமுதனீக்குதலானுதாரக்கினிநேரொக்குமே. (௧௪)

ஒக்கும்படிக்கொருவமையுண்டோவுயர்ந்தோங்குசம்பு
பக்கந்தனிலயபோகாதிகாரப்பரவைமமை [த்
மைக்கொண்டலாலியொத்தொன்றுமருணையில்வாழ்ந்துபத்து
திக்கும்புரந்திடுந்தேவசிகாமணிச்செல்வமொன்றே. (௧௫)

ஒன்றருணாசலத்தேவசிகாமணியோருருவந்
துன்று † பராக்கு ‡ நடுச்சத்தியோடு § சுயோன்முகியுங்
குன்றலில்லாதகுணகுணிவாதமுங்கோதிலிரண்
டென்றசற்காரியவாதமுமாகமமெங்கெங்குமே. (௧௬)

---

* அநௌபமமாநிந்திதம் - வடநான்முடிபு.

† பராக்கு=எதிர்முகசிற்சத்தி.

§ நடுச்சத்தி ஒன்றுண்டென்பது பொருந்தாதென்பர் திராவிட பாடியமுனிவர்.

‡ சுயோன்முகி=திரும்பியமுகசிற்சத்தி என ஞானப்பிரகாச முனிவருரைப்பர். இனி இவற்றைமுறையே "புறப்பொருளை நோக்கிநின் றுணர்த்துவதூஉம், புறப்பொருளை நோக்காது அறிவுமாத்திரமாய்த் தன்னியல்பி னிற்பதூஉம்" என விளக்குவர் திராவிட பாடியமுனிவர்.

எங்குந்திகழ்சமயங்களெல்லாமலரிம்மலர்த்தேன்
றங்குஞ்செங்தேனினிருல்சைவமாமுத்திசாகரமே
செங்குன்றவில்லருணாசலத்தேவசிகாமணியே
துங்கம்பெறுமந்தக்கோற்றேனினியசுவைச்செய்தியே. (கஎ)

செய்திறஞ்சித்தருணாசலத்தேவசிகாமணிபி
னெய் * இருபேரையுள்வைத்தெண்ணுஞானமிலயமிச்சை
யுய்தவஞானந்தொழில்போமிருவரையுள்ளுறுத்து
மெய்தருமிச்சைசங்கற்பாதிகார † விவிர்தமன்றே. (கஅ)

அன்றேதனக்குப்பயன்கூறியா ‡ தர்த்தமாத்திரநோக்
கொன்றேயுஞ்சுத்தசிவத்தின்சுபாவமுயரருணைக்
குன்றேயுந்தேவசிகாமணிமூவகைக்கோலமெல்லாஞ்
சென்றேபிறர்பிரயோசனப்பார்வைகள்செய்வகைக்கே. (ககூ)

செய்வகைச்சோணகிரிமேவுதேவசிகாமணிபான்
மொய்வகையோர் § பிரமாவிண்டுருத்திரன்மூவகைக்கு
முய்வகையேயதிகாராதிமூவரொன்றுள்ளவகை
மெய்வகையேசிவலிங்கமுக்கண்டங்கள்மேவுறுமே. (உ0)

உறுசிவனோடிலயன்சத்தனிட்களனுத்தியுத்தன்
கறுவில்சதாசிவன்போகன்மகாநிட்களசகளன்
பெறுமுறையீசன் || சகளாதிகாரன்பிரவிருத்தன்
சிறுபேர்முன்னான்கருணாசலத்தேவசிகாமணிக்கே. (உக)

---

* இருபேர்=போகர் அதிகாரர்.

† விவிர்தம=வியத்தி.

‡ அர்த்தமாத்திர நோக்கு = சொரூப மாத்திரமாகப் பார்த்தல்.

§ அதிகார சிவன்முதலிய மூவரும்முறையே பிரமன் முதலிய மூன்றுபெயரும் பெறுவரென் றறிக.

|| சகளாதிகாரன் = சகளன் அதிகாரன் எனத் துவந் துவன்.

மணிக்கேழண்ணாமலைத்தேவசிகாமணிமன்னுமுன்னான்
கணிக்கேயுறுஞ்சம்புசத்திமுன்னான்கவ்வளவுவிந்துப்
பணிக்கேபதிதத்துவமுப்பத்தாறுபகுப்பெனலாந்
திணிக்கேள்விவல்லசிவயோகரெண்ணியசின்மயத்தே. (௨௨)

சின்மயமானபரையாதியைந்துதிகழ்கலையைந்
தின்மையில்சாதாக்கியமைந்து * மூர்த்தியைந்திக்கலப்பி
லன்மையிலாமந்திரமைந்துசத்தியைந்தாலல்லவோ
மின்மையண்ணாமலைத்தேவசிகர்மணிவேற்றுமையே. (௨௩)

வேற்றுமைதீர்மண்முதற்குடிலாந்தம்வியாத்தியெனச்
சாற்றுநன்மந்திரஞ்சிங்காசனஞ்சிவசத்தியொன்றே
மாற்றருமூர்த்திசிவமூலமென்றன்புமாமலராற்
போற்றிலண்ணாமலைத்தேவசிகாமணிபொற்பயனே. (௨௪)

பயனாமண்ணாமலைத்தேவசிகாமணிப்பார்த்திபற்கு
நயனாகர்விந்துநல்லயிராவணநாதமன்ப
ருயர்சேனைமந்திரிவாமாதிகளொன்பதொன்பதுபே
ரயராதவந்தியர்மந்திரமாறுமெய்யாரணியே. (௨௫)

ஆரணியோடுசென்னியுரோதையகக்கரணந்
தாரணியோர்பணியீசானியாகியசத்தியொடு
பூரணியார்த்திபுகழ்வாமைமூர்த்திபுறக்கரணஞ்
சீரணிசோணகிரிமேவுதேவசிகாமணிக்கே. (௨௬)

காமணிசூழருணாசலத்தேவசிகாமணியோர்
தூமணிமேனியையைந்தானபோதுறுதூலமென்ன
லாமணிச்சாதாக்கியமெனிற்சூக்குமமாகுமென்பர்
தேமணிச்சின்மயமொன்றலவோபரந்தேருதற்கே. (௨௭)

---

* மூர்த்திஐந்து - சதாசிவன், ஈசன், பிரமன், ஈசுரன், ஈசானன், என இவர்.

தோருஞசலத்தேவசிகாமணிசிருலகத்
தோனங்தேசருட்சத்திகள்கோபிகையெனனி
யோரிலுரோதைதங்கோத்திரிநேத்திரியோத்திரியே
நேரறுகின்றதிராணைநல்வாமைசியாமிகையே. (உஅ)

கைக்கொளிரவுத்திரியேபிலாவிகையேசிரத்தை
தக்கதொர்பாலினிதான்சுவாலாப்ரகலாதினியே
யக்குலத்தம்பினியேவிகிராப்பதினுறுசத்தி
மிக்கசிவசத்திகொண்டேயுலகைவியாபிக்குமே. (உகூ)

* வியாபினியாதியைந்தேபரநாதம்விரவு † மிந்தி
கையாதியைந்தேயபரநாதந்தேவசிகாமணிமே
வியாகுமண்ணு ‡ வதிருக்குமைமுன்பரவிந்து § நிவிர்த்
தியாதியபரவிந்துச்சிவநான்குபின்சிற்சத்தியே. (௩0)

சத்தியுள்ளேசெனனிக்கொர்பண்டைப்புத்தருந்திதியோ
டத்தருரோதமுரோதைக்கழிப்போடனுக்கிரகம்
வைத்துறுமாரணிக்கிவ்வாறுமூன்றுவகையிலைந்தாய்ச
சுத்தவண்ணமலைத்தேவசிகாமணிசூழ்தருமே. (௩க)

தருமுந்தயன்மாலுருத்திரனீசன்சதாசிவன்மே
லொருவிந்துநாதம்பராசத்தியோர்சிவமொன்பதின்மேற்

---

* வியாபினியாதியைந்து—வியாபினி வியோமரூபை, அனந்தை, அனாதை, அநாசிருதை.

† இந்திகையாதிஐந்து—இந்திகை, தீபிகை, ரோசிகை, மோசிகை, ஊர்த்துவகாமினி.

‡ அதிருக்குமைமுன்னைந்து—அதிருக்குமை, சூக்குமை, அமிருதை, மிருதை, வியாபினி.

§ நிவிர்த்தியாதி—நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, அதீதை.

கருதுந்தன் * மத்தியமாநிருத்தானந்தக்காட்சிதருந்
திருமந்திராகமத்தேவசிகாமணிச்சிற்குருவே. (௩௨)

குருமாமணிச்சுத்தவித்தையங்கோயில்குளிர்தடமா
யொருநீள்சதாசிவப்பீடங்கிழங்கதிலோமிலையா
யருண்ஞானமொன்றிரண்டாய்ப்பூத்தபூவருணைசலஞ்சேர்
திருஞானத்தேவசிகாமணிதாமரைச்சேவடியே. (௩௩)

அடியார்க்கருள்செயுருவாயுருவருவா † யருவாய்
முடியாமுடியிற்குருவாய்க்கறுத்திட்டமும்மலவன்
செடிதீரண்ணுமலைத்தேவசிகாமணிச்செஞ்சடையப்
படிமேனிசெவ்வணிசெம்தார்செஞ்சாந்துசெம்பட்டுடையே. ()

உடையவுள்ளோமஞ்செய்தாறத்துவாவிட்டுமாபதிபாற்
கடையறவேபிறப்பித்தருட்சோடசகன்மஞ்செய்து
தடையறவேவளரன்பாற்செவிலியந்தாயொக்குமாற்
புடைகொளண்ணுமலைத்தேவசிகாமணிபுத்திரர்க்கே. (௩௫)

கேளாவதிசயமொன்றுண்டுசோணகிரியிலொரு
தோளாமணியெனுந்தேவசிகாமணிச்சோதிவிழி
யாளாம்வகைசெய்தரிசனவேதியொன்றுகுமங்கை
தாளாகமெங்கும்பரிசனவேதிகள் சத்தியமே. (௩௬)

சத்தியம்பூதவுயிரந்தரவுயிர்தத்வவுயிர்
அத்தருசிவன்மந்திரான்மாவொரீஇப் ‡ பரமாதல்சுத்தஞ்

---

* தன்மத்தியமா நிருத்தானந்தக் காட்சிதரும்-என்றது, உன் மனுந்த வியாபகராகிய நிட்கள நிருத்தமத்திய நிலகரை.

† அருவாய் முடியா முடியிற்குருவாய் - என்றது இலயருடைய முடியில், அனவரத வானந்த நடனரூப நிட்களாந்த சுத்தசிவம், ஆன்மாக்களை முத்தியி லுய்க்கவேண்டுமெனத் திருவுளத் தடைத்தவிடம் குருமூர்த்தமென் றிருத்தலாலெனக.

‡ பரமாதல்—பரமான்மாவாதல்.

சித்தருணசலத்தேவசிகாமணிசெய்முத்தியீ
* தத்துவிதந்துவிதம்விசிட்டங்களசுத்தங்களே. (௩௭)

சுத்தங்கண்மேனின்றதேவசிகாமணிசோணகிரிக்
கொத்துறுதீபக்கொழுந்தேநம்பேருரைக்கூட்டங்களே
வைத்துறு † மேதைமுதலாங்கலைகின்மலவுவத்தை
பத்தெனுங்காரியமம்மலைசூழும்பலவழியே. (௩௮)

வழிதேனண்ணுமலைத்தேவசிகாமணிமாதவருக்
கழியாததோழர்பரமுத்தர்பாலரபரமுத்த
ரொழியாதபேரர் ‡ பரபோகர்போகப்பின்னேருருமையர்
மொழியாவுயிரடியார்க்கடியாரின்முறைபலவே. (௩௯)

பலசத்தகோடியெட்டைந்தைந்துநான்கொன்றென்பாரருண
சலர்வித்தைகள்வித்தையீசர்சதாசிவஞ்சத்திசிவங்
கலனிற்கழல்பதக்கங்குழைபட்டங்கதிர்முடியாய்
நலனுற்றழகுறுந்தேவசிகாணிநாயகமே. (௪0)

மேலேவிளங்கியதேவசிகாமணிமேவருணைப்
பாலேநெய்பெற்றியயிக்கமுந்தீபம்பனிவெண்ணிலாக்
காலேயுந்தானவயிக்கமுங்காண்பவர்கண்ணொளிக
ளாலேதடையற்றஞானைக்கியங்களுமாதனன்றே. (௪௧)

நன்றருணைசலத்தேவசிகாமணிநாயகருக்
கென்றுமிடைபிங்கலையாமிராப்பகலிற்றபொழு
தொன்றுஞ்சுழுனையெனுந்திருக்கோயிலொன்றுண்டிதனைக்
கன்றுமனத்தினர்காணுக்கதையென்னகாரணமே. (௪௨)

* அத்துவிதம் = மாயாவாதி சொல்லும் கேவலாத்துவிதம்.

† மேதைமுதலாங்கலை = மேதைமுதலிய சோடசப்பிராசாத மந்திரகலைகள்.

‡ பரபோகர்=புவனபதிகள், போகப்பின்னோர்=அபரபோகர். அவர் புவனவாசிகள்.

காரணமாமருணசலத்தேவசிகாமணியாம்
பூரணபானுவுதயங்கண்டென்னைப்புடைத்தெழுப்பி
யாரணமேற்கொண்மகாமாயைக்கூட்டிலடைத்திருந்த
வாரணஙகூவவிடிந்ததுகாணிந்தவல்லிருளே. (௬௩)

இருளிலன்னுமலைத்தேவசிகாமணியென்றியல்பாய்த்
தெருளுமனுதிமுத்தன்னுதிமுத்தன்பின்செப்புதற்கா
முருவபாமுத்தன்சீவன்முத்தன்சிற்றுயிரென்னவே
மருவுமொன்றேடைவகையாகுஞ்சித்தென்னுமாமணியே. (௬௪)

மாமணிதேவசிகாமணிசோணமலையொளிபோ
னீமணியென்றுள்ளநீண்மாசறுத்தநிரஞ்சனனுக்
காமணியீரெண்கலைதந்தைவன்னஞ்செய்தன்னமிட்டுத்
தூமணிமாவுரைவித்தையஞ்சாமையிற்சூழ்தருமே. (௬௫)

சூழ்தருரேசகபூரகமாமிருசூதகம்விட்
டேழ்தருகும்பகத்தூடேமுழுகியயாருணை
வாழ்தருதேவசிகாமணிவாழ்வைவணங்கியன்பாய்
வீழ்வதுள்ளேயுமுண்டாவாகனுதிவிதிமுறையே. (௬௬)

விதிமுறைச்சித்துவியத்தியாவாகனமேலிவ்வண்ணம்
வதிவதுதாபனந்தேவசிகாமணிவாழருணை
நிதியெனுமான்மசிவசாநித்யஞ்சந்நிதானமிதைப்
பொதிவுறச்செய்யுந்தடைசந்நிரோதனம்பூசகர்க்கே. (௬௭)

சகர்க்கேசர்வஞ்ஞுந்திருத்தி * யனுதிபோதத்தெள்ளறி
வகத்தேநிகழுஞ்சுதந்தரத்தோடுமலுத்தசத்தி

---

* அனுதிபோதத் தெள்ளறிவு = அனுதிபோதமாகிய வியற்கை யறிவு. அனுதிபோதம் அனுதிமுத்தத்தன்மையென்று சாதிப்பர் திராவிட பாடியகாரர். சமவாதவுரை மறுப்பிற் காண்க.

மிகத்தேறனந்தசத்தித்தொழிலாறும்விளங்கவண்ணா
முகத்தேமெய்த்தேவசிகாமணிநீக்குமிம்மொய்யிருளே. (சஅ)

மொய்யிருண்மூலமலமொன்றனாதியின்மூடவுள்ள
மெய்யறிவின்றியருவாகியெங்கும்வியாபகமாய்ச்
செய்யருணாசலத்தேவசிகாமணிச்சித்துளித்தற்
கையமிலாவியகர்த்தாவுமாய்ப்பலவாய்நிற்குமே. (சகூ)

நிற்குமண்ணாமலைத்தேவசிகாமணிநீடுலக
முற்கொளவேநின்றமாயையுள்ளாதிமுடிவினுள்ள
வற்கமொர்மூன்றுவகையாகு * மாயைவயிற்றுயிர்கள்
சொற்குலவும்பிரளயாகலரெனச்சேர்வுறுமே. (ரு௦)

சோர்வுறவேவித்தையின்கீழிருமலத்தொல்லையற்றுக்
காருறுமோர்மலமுள்ளார் † விஞ்ஞானகலரருணைச்
சீருறுசோணகிரிமேவுதேவசிகாமணிபா
ணாருறமும்மலநாசஞ்செய்யாவிகணால்வகையே. (ருக)

நால்வகையப்பிராத்தவாகியமெய்யுறுநர்கள்பின்னு
மேல்வகையாகும்பிரநட்டவாகியமெய்யரண்ணாப்
பால்வகைத்தேவசிகாமணியாளப்படும்வகையாற்
றேல்வகையற்றதிரிபந்தியோடுதுவிபந்தியே. (ருஉ)

பந்திக்கும்பாசமொருகாமருபியும்பார்க்கிலுயிர்
சந்திக்குந்தோகையுமாய்நின்றவாவன்பர்தாமருணை
வந்திக்குந்தேவசிகாமணிதன்னைமனத்துட்கொண்டு
சிந்திக்கும்போதந்த ‡ மூர்ச்சையுந்தீர்ந்தொளிசேர்வனவே. ()

---

* மாயைவயிறு, மாயையின் மத்தியபாகம், அது பௌட்கரத்துங்காண்க.

† விஞ்ஞானகலர், விஞ்ஞானகலரென மரீஇயிற்று.

‡ மூர்ச்சையும்—மூர்ச்சாமோகமும், உம்மையினால் பிரஞ்ஞாமோகமும் நீருமெனக் கொள்க.

சேர்வனஞ்சூழருணாசலத்தேவசிகாமணியாற்
கார்வனமாமலக்கட்டறுமட்டுங்கலாதியினா
லார்வனவாய்ச்சிற்றறிவானவாவியவத்தைகளாற்
சோர்வனவாகுமவத்தையின்பான்மைகள்சொல்லிடினே. (௫௪)

சொல்லிடிற்கேவலத்தோடேசகலமுஞ்சுத்தமுமாய்ச்
செல்லிடுங்காரணமூன்றாந்தேவசிகாமணிவாழ்
வில்லிடுஞ்சோணகிரிபோலளவற்றமேன்மையுண்டாய்ப்
புல்லிடுமைவகையாங்காரியாவத்தைபுறக்கலர்க்கே. (௫௫)

கலர்க்கரிதாமருணாசலத்தேவசிகாமணியாற்
பிலப்படுங்கீழொடுமேன்மத்தியம்பின்பிரேரகமேற்
சொலப்படுநின்மலமென்னவைந்தாமித்தொகையைந்திலே
புலப்படுமேயவத்தாபஞ்சகங்கள்பொலிவுறவே. (௫௬)

பொலிவுறு * சாக்கிரசாக்கிரமேமுதற்போதமெல்லா
மலிவுறுசாயுச்சியாந்தவரைபத்துமற்றொன்றுமே
கலியிறுஞ்சோணகிரிமேவுதேவசிகாமணியாற்
பலியுறமூவைந்துபேதங்களாய்ச்செயும்பான்மைகளே. (௫௭)

பான்மையினாவிகளிற்பூதசீவனிப்பாரினிலுண்
டானபுசிப்பன்னசாரத்தினாற்கருவாகியன்னை
யீனமிலாதுயிர்த்திட்டதென்றாகுமியலருணைத்
தானநந்தேவசிகாமணியிந்திரசாலமொன்றே. (௫௮)

சாலவங்கந்தனிலுள்ளொலிநாதச்சதுர்விதவாக்
கேலவங்குள்ளபிராணனபானனியைந்துளதாஞ்

---

* சாக்கிர சாக்கிரமுதல் சாயுச்சியவரை பதினொன்றாவன, சாக்கிர சாக்கிரம், சாக்கிரசொப்பனம், சாக்கிரசுழுத்தி, சாக்கிர துரியம், காலபரம், அதீதம், பரதரிசனம், விசுவக்கிராசம், உபசாந்தம், சிவதரிசனம், சிவசாயுச்சியம்.

சீலாநந்தாவருணைசலத்தேவசிகாமணிதன்
பாலியைந்தோரந்தரவுயிராகப்பகருவரோ. (ருகூ)

பகர்மாத்திரைகள்மனமகங்காரம்பரவுபுத்தி
யகமேவுமென்குணமுக்குணமூலமென்றூன * மகா
னிகழவாங்கலாதிசுத்தஞ்செறிதத்துவநோணுவாந்
திகழசீரங் ணுமலைதந்தேவசிகாமணிசேடடிப்பதே. (சு0)

சேட்டிக்குந்தேவசிகாமணிமேவித்திகழருணை
வீட்டிற்புகாதெங்குமாய்நுண்ணிதாயென்றுமேயுளதாய்
நாட்டிற்பெறுந்தத்துவந்தொறும்வேற்றுமைநண்ணிமலங்
காட்டிப்பல்யோனிதொறுஞ்சூழுஞ்சீவகதியணுவே. (சுக)

அணுவகையோரொன்றுக்காறெழுத்தேழிரண்டாமெழுத்துத்
திணைதருவிந்துநாதந்திகழ்நாமாததியக்கரஞ்சேர்ந்
தணைவுறுமேமந்திரான்மாச்சடங்கமங்காமருணைத்
துணையின்மெய்த்தேவசிகாமணிநீக்குந்துகளுறுமே. (சுஉ)

துகளுறுமைவகையான்மாவிவ்வாறுதுவக்குறுமித்
தகவுயிர்தத்தமிற்சேர்ந்திடும்யாணிந்தத்தாழ்வொழிந்து
திகழ்வனென்றேபரமான்மாவிளங்குந்திருவருணை
நிகழ்தருதேவசிகாமணியாற்பெற்றுநின்மலமே. (சுரு)

மலங்கன்மமாயைமாயேயந்திரோதமிவ்வாறைந்திறைற்
கலங்கும்பிறவுயிர்தேவசிகாமணிகாவருணை
யிலங்குலகாயதனுதிவேதாந்திமட்டின்பமெனும்
பலங்கொளும்புறகலவாதிகள்பேறுபலபலவே. (சுச)

பலவாய்மைத்தேவசிகாமணிசோணையம்பாரினிற்சீ
ருலகாயதன்கவுளன் † பிரதீபநிர்வாணனெடு

---

* மகான்=பிரகிருதி.

† பிரதீபநிர்வாணன்=புத்தரில் ஒருசாரான்.

வலகன்மிசோதிடன்சூரியனக்கினிவாதியர்க
ளலகிலர்காண்பஞ்சபூதப்புவனத்தமர்பவரோ. (௬௫)

பவமில்பிரமத்தைப்பூதாண்டகாரணப்பாவனையாய்த்
தவநினைமார்த்தர்கள்தன்மாத்திரைமுத்திசார்ந்திருப்ப
ரிவரிந்திரியான்மஞானலோகாயதரிந்திரியப்
புவனரண்ணுமலைத்தேவசிகாமணிபோந்தினிதே. (௬௬)

இனிதாமனுன்மஞானுபாயலோகாயதரிவர்க்குத்
தனியாமனுபுவனந்தனின்முத்திதயங்கருணைக்
கனியானதேவசிகாமணிசீரகங்காரத்துள்ளே
* செனியாவிடமகங்காரான்மஞானவைசேடிகர்க்கே. (௬எ)

சேடிகத்தேதருந்தேவசிகாமணிசீரருணை
நாடியபுத்தியான்மாஞானமென்னுமையாயிகர்க்கு
வீடியல்புததிவிருததியான்மாவுள்விவேகபுத்தர்க்
கீடியல்புததிப்புவனப்பிராத்தியெழின்முத்தியே. (௬அ)

முத்தியண்ணுமலைத்தேவசிகாமணிமூட்டுதலாற்
சத்தசத்தான்மவிவேகத்தருகர்தமக்குமுத்தி
யொத்தகுணப்புவனத்தேபிராத்திபின்னோர்பிரம
சித்தமெய்ஞ்ஞானப்பரிணதிவேதாந்திகளடைவே. (௬௯)

அடைவுறுநாராயணப்பிரகிர்தியான்மாவெனவே
நடைபெறுமோர்பாஞ்சராத்திரிபேறுநகுமருணை
யிடையமர்தேவசிகாமணியேயமைத்திட்டதென்பர்
தடைதீர்பிரகிருதிப்புவனந்தனிற்சார்வதுவே. (எ0)

சார்தருசத்தப்பிரமங்கிரீடைதரும்பிரமம்
பேர்தருசித்ரப்பிரமஞ்சொல்வாதப்பிரமுகர்கட்
கேர்தருதேவசிகாமணிசோணகிரீசனல்குஞ்
சீர்தருகின்றபுவனம்பிரகிருதிக்குள்ளதே. (எக)

* செனியாவிடம்—முத்தித்தானம்.

திக்குளண்ணுமலைத்தேவசிகாமணிசெப்புமியோ
கக்குறிப்பாதஞ்சலன்மான்புருடனையுற்றறியத்
தக்கநற்சாங்கியன்விவர்த்தவேதாந்தஞ்சொல்சந்நியசி
புக்கான்மவாதஞ்சொலலாற்புருடப்புவனத்தரோ. (எஉ)

புவனமெய்த்தேவசிகாமணிதீக்கைசெய்புண்ணியராய்ப்
பவமில்சாகாரசிவபாவனைசெய்பரிவுடைய
சிவவாதியரிற்பவுராணிகர்முத்திசிரருணை
யவர்சொல்லிராகபுவனத்திலேசென்றமர்தரலே. (எங)

அமர்தருசாகாரநிராகாரத்திலரனையெண்ணு
நமர் * சோமசித்தாந்திகள்கலாராகத்தைநண்ணுகெற்பத்
துமருவுவித்யாபுவனத்துவாழ்வர்கள்சோணகிரி
யெமரெனுந்தேவசிகாமணியேசெய்திடுங்கதியே. (எச)

கதிசிவாவேசஞ்சொல்காபாலியர்க்குக்கலாபுவனந்
துதிகொள்காலேசுரவாதிகாலத்தத்துவப்புவனம்
பதியுறுசங்கிராந்தஞ்சொன்னபாசுபதர்க்கருணை
வதியுறுந்தேவசிகாமணிசெய்முத்திமாயையிலே. (எரு)

மாயாபுவனத்துளார்பாசுபதங்கொள்வைதிகரு
மீயார்சமுற்பத்தியோர்மாவிரதவிசேடருமே
தூயாரண்ணுமலைத்தேவசிகாமணிச்சோதியருள்
சேயார்கலாதத்துவாந்தங்கொள்சோதினிதீக்கையுண்டே. ()

தீக்கையுண்டாகில்விஞ்ஞானகைவல்லியத்தேபொருந்த
மோக்கமுண்டாஞ்சர்வஞத்துவமாத்திரமோக்கமெனத்
தேக்குமகாவிரதர்க்கொருசுத்தவித்தியாபுவனங்
காக்குமண்ணுமலைத்தேவசிகாமணிகற்பனையே. (எஎ)

---

* சோமசித்தாந்திகளுக்கு, கலாராக கெற்பவித்தியா புவனப் பிராப்தியே முத்தியென்க.

கற்பனைப்பேறருணசலத்தேவசிகாமணியா
னற்பிரயோச்சியமேகர்த்திருத்துவநாட்டவல்ல
சொற்பிரவாகேசுரர்க்குமனேகேச்சுரர்க்குமுத்தி
பொற்புறலாமீசுரபுவனத்திற்புகுமிசைவே. (எஅ)

இசைவாஞ்சதாசிவசாமியவாதியெனுமுயர்வால்
வசைதீர்சிவசமவாதிசதாசிவபுவனத்தின்
மிசையாமண்ணமலைத்தேவசிகாமணிமெய்யருளால்
நசை * மாசில்சாத்தர்சத்திப்புவனம்பெறநல்லவரோ. (எகூ)

நல்வாமதக்கிணகாருடபூதத்தினுடுதந்த்ரர்
செல்வாழ்வுசத்திகலாபுவனத்திற்றிருவருளைச்
சொல்வாய்மைத்தேவசிகாமணிதீக்கையிற்றேய்ந்திருந்து
மொல்வாச்சிவவியத்திக்குளுரு ருக்குமுண்டொருங்கே. (அ0)

உண்டோர்வைந்தவதேகஞ்சிவனுக்கிதுண்மையெனுந்
தொண்டர்சாமானியசைவர்சிவதத்துவபுவனங்
கண்டவர்சோணகிரிமேவுதேவசிகாமணியைக்
கொண்டறிவோர்தத்துவாதீதரேதுங்குறைவிலரோ. (அக)

குறைவிலண்ணமலைத்தேவசிகாமணிகொள்கையெல்லா
நிறைதருதுல்லியசைவசித்தாந்தநிகழ்சித்தியா
யறைதருசாத்தியயிக்கமுமாய்ச்சச்சிதானந்தமாய்
முறையுறுசீர்ச்சிவசுத்தாத்துவைதமெய்முத்தியொன்றே. ()

ஒன்றேயுஞ்சத்திபலவாய்ப்பொருளென்றுமோர்தத்வ
மன்றுகிக்கன்மமொப்பாய்க்கன்மமாயைக்கடங்குதல்போ
னன்றுகியபசுதத்துவத்தேவந்துநண்ணுமலந்
தொன்றுமண்ணமலைத்தேவசிகாமணிதொட்டதன்றே. (அங)

தொட்டுயிர்ச்சத்தியைத்தோய்மலசத்தித்தொகையிரண்டா
மட்டறுமாவாரகசத்தியொன்றுமறைக்குமந்தக்

* மாசில்சாத்தர் சுத்தசாத்தர்.

கட்டறவேசெயுந்தேவசிகாமணிகாணருணைச்
சிட்டருக்கீசர்செறு தூநஞ்சாதித்திறமென்னவே. (அச)

என்விதிதேவசிகாமணிசோணவெற்பெய்திலெய்தா
முன்னையதோங்கியாமிகாசத்தியேதுவின்மோகமதந்
துன்னியராகம்விடாதமொர்தாபமெய்ச்சோபமொடு
மன்னுவிசித்திரமென்றெழுமாயையிம்மன்னுயிர்க்கே. (அரு)

உயிரைமறைத்தணுவாக்கியவொண்புகழோர்மலத்தை
யயிரறமூன்றுகலைமேலறுத்ததன்வாசனையை
மயிருண்மனூந்தவரைநீர்த்தருணையில்வாழ்ந்தடியார்
செயிரறசெய்திறந்தேவசிகாமணிசித்திரமே. (அசு)

சித்திரரோதைசெடானுக்கிரகந்திகழ்மலரு
பத்துறுசத்வபரிணதிநெல்லிப்பழம்விதைமா
யைத்திறம் * ரூபாந்தரபரிணமம்வயங்கருணைச்
சித்தெனுந்தேவசிகாமணியால்வினைதீர்தரமே. (அஎ)

தரமிகுந்தேவசிகாமணிசோணத்தலந்தனின்மா
சருகும்விஞ்ஞானகலர்க்கேதனுகரணுதியெல்லாம்
வருவதுநால்வகைவாக்காதியார்க்கும்வழங்கவுரை
தருவதுமோர்சுத்தமாயையென்றேசொல்லத்தக்கதுவே. (அஅ)

தக்கதொர்சூக்குமநாதங்கலைக்கொருதாரகமா
மக்குலத்தூலநாதங்காலமாதியைந்தும்பரிக்கு
மிக்கருணசலத்தேவசிகாமணிமேயவிந்து
கைக்கொண்மகான்முன்னகங்காரமட்டெய்தக்கற்பித்ததே. ()

கற்பித்ததேவருணசலத்தேவசிகாமணிசொன்
னற்புத்திசேர்தரும்பாவப்பிராத்தியநாடகந்தை
யிற்பற்றுமோர்மனத்தோடேயிருவகையிந்திரியஞ்
சொற்பெற்றதாரகமாயேதரிபடுஞ்சொல்லிடிலே. (கூ0)

---

* சொரூபாந்தரபரிணமம் தொகுத்தல்.

சொல்லிடிற்சாதாக்கியமேதன்மாத்திரைதொக்கவைந்தைப்
புல்லிடுந்தாரகம்வித்தேசர்சூக்குமபூதமைந்தை
மல்லருணைசலத்தேவசிகாமணிமந்திரங்கட்
கொல்லுறுதாரகமாந்தூலபூதமுறுந்தொகையே. (கக)

தொகையாமுலருக்கொர்காரணமாமென்றுஞ்சொல்லருவாய்
மிகையாமசுத்தமுமேகமுமாகிவியாபகமாம்
வகையாயண்ணமலைத்தேவசிகாமணிமாற்றில்வந்து
தகையாதுநித்தியமாய்நிற்குமாயைசகலருக்கே. (கஉ)

சகலர்தங்கன்மபரியந்தம்பந்தஞ்செய்தன்மையினு
லகலருந்தேவசிகாமணிமேவருணைசலத்திற்
புகலுறுந்தீபம்புருடன்மாயேயம்பொருந்துதிரி
மிகலுறுங்கன்மநறுநெய்யுமாகிவிளக்கிட்டதே. (கங)

கிட்டருந்தேவசிகாமணிசோணகிரீசனருண்
மட்டில்புரியட்டகமாதலபூதந்தன்மாத்திரைகள்
கட்டுறுகன்மேந்திரியம்பொறிகரணங்கள்குண
மிட்டமகான்பின்கலாதிகள்மாயையி * லெண்வகையே. (கச)

வகைசூழுடல்பரஞ்சூக்குமந்தூலம்வைந்தவமுந்
தொகைசூழ்புரியட்டகமுமைம்பூதத்தொகுதியுமாந்
திகைசூழண்ணமலைத்தேவசிகாமணிதீர்செனக
மிகைசூழுந்தாரகம்போக்கியமாகும்வினைப்பலமே. (கரு)

பலமேவருணைநந்தேவசிகாமணிபற்றறச்செய்
மலமேயனுதிபின்னுகந்துகமதுமாயைகன்ம
முலவாதுசெய்யும்பிரவாகமேசெய்யுரோதசத்தி
பலர்பாலனுக்கிரகப்பார்வைசத்திநிபாதமதே. (கசு)

சத்திநிபாதம்பெறத்தீக்கைசெய்துதகவருணைச்
சித்தெனுந்தேவசிகாமணிமூவகைசெய்தவனை

* எண்வகை=எட்டுக்கொத்து.

ருத்ரமந்த்ரபதிசானத்துய்க்குமுயர்பதமேல்
வித்தைமகேச்சுரந்தேகவிர்த்திப்பின்மேவுறுமே. (கூஎ)

மேலாகும்வித்தைநற்சாந்தியதீதையைமேவல்சிவ
சாலோகசாமீபசாரூபமாமிவைசத்திசிவம்
பாலாமண்ணுமலைத்தேவசிகாமணிபண்ணுமுத்தி
நாலாவதிச்சிவசாயுச்சியத்தினண்ணுதிருளே. (கூஅ)

இருளில்சதாசிவமாம்பதஞ்சாலம்பயோகியெய்தும்
புரிகிரியாவான்காலாக்கிராந்தபுவனமெய்தும்
பிரகிருதியக்கிராந்தப்புவனம்பெறுஞ்சரியைக்
கருணைநந்தேவசிகாமணியாற்பெறலாமருளே. (கூகூ)

ஆமருணசலத்தேவசிகாமணியாகமமென்
றேமுளைத்தோங்கியுத்தேசக்கவர்கொண்டிலக்கணமாம்
பாமருவுந்தழையெல்லாந்தழைத்துப்பரீக்கைநறும்
பூமலராய்ப்பலமெல்லாம்பழுத்ததிப்பூவினுமே. (க00)

பரவுஞ்சிவபத்தரொல்லாரும்வாழியிப்பத்திவர
விரவுஞ்சிவதருமத்திறம்வாழியிம்மெய்த்தருமந்
தரவருமாகமம்வாழியிவ்வாகமந்தந்தருணை
வரவருணசலத்தேவசிகாமணிவாழியவே. (க0க)

ஞானவந்தாதி முற்றியது.

---

ஸ்ரீமத் தேவசிகாமணிதேசிகர் திருவடிவாழ்க.

---

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# நான்மணிமாலை.

## காப்பு.

தேன்மணி மாலையொடுந் தேவ சிகாமணிமே
னான்மணி மாலை நயந்தணிய - மேன்மணிக்கேழ்
வட்கருணைக் கோன்மிடற்றில் வான்யமிழோ டன்றசிறு
கட்கருணைக் கும்பமுனி காப்பு.

## வெண்பா.

பூமலிசெங் காவி பூத்ததடம் போலருணைத்
தேமலி தேவ சிகாமணியே - யேமச்
சகிதாதி கும்பகாந் தத்தேசிற் சத்திச்
சகிதாதி போகந் தரும். (க)

## கலித்துறை.

தருமாதி மூன்று சமுத்திர நீந்தித் தடைபுரிந்த
கருமாதி மூன்று மலநீங்கி முக்குணக் காடகன்றே
யருமாதி மாயை யடைத்த கபாட * மகன்றுறலாந்
திருமாதிய லருணாசலத் தேவ சிகாமணியே. (உ)

## அகவல்.

மணியினங் குயின்றென வணிமலர் பொதுளிய
பத்திரப் பைம்பொழிற் சித்திரப் படாஞ்சு

* அகன்று என்பது செயவெனெச்சத்திரிபு.

முன்னம் பொலிந்த நன்னெடுஞ் சிகரக்
கன்னசா லைகளுங் கன்னகூ டமுமா
யருவித் தொங்கன் மருவித் தூங்க
மாமுடித் தீப மணிக்குடந் தாங்கித்
தீபத் தான்முகில் செவ்வா னாகித்
தங்கத் தகட்டிற் பொங்கொளி பரப்பத்
தடந்திகழ் கொடிஞ்சி நெடுந்தேர் போலுந்
திருவரு ணாசலக் குருவரு ணாசலச்
சைவசி காமணி தெய்வசி காமணி
யமேய மநிச்சய மநௌபம மநுமயஞ்
சூக்குமஞ் சருவக நித்தியந் துருவ
மவ்யய மீச மதீந்தியஞ் சூன்ய
நிர்க்குண மென்று நிகழ்கா ரணப்பெய
ரந்தமி லாமையா லமேய மாகியு
மமரிட மின்மையி னநிச்சய மாயு
மதுல மாதலி னநௌபம மாயு
மமல மாதலி னநுமய மாயுஞ்
சூழ லின்மையிற் சூக்கும மாயுந்
தான்வியா பகத்தாற் சருவக மாயு
நிட்கா ரணத்தா னித்திய மாயுஞ்
சேராசை யின்மையிற் றுருவ மாயு
மறிபூ ரணத்தா லவ்யய மாயு
மிறைமை யெய்தலி னீச மென்று
மரும்பசி தாக மளந்தறி வதுபோ
லறிவரி தாகு மதீந்திய மாயுஞ்
சேர்சட மல்லது சித்துரு வாதலிற்
சோர்வி லாத சூனிய மாயும்
வீங்குசாத் துவிக விந்து வைந்தவ
நீங்கலின் றமையா னிர்க்குண மென்றுஞ்

சத்தா மாத்திர மாந்தனிப் பொருளைக்
* காரக மென்னும் பாரமத் திட்டு
நெய்போன் முத்தியி னெய்தநீ செய்த
நன்றிக் கெதிர்செய் யேனிச் சித்தே. (௩)

விருத்தம்.

சித்துரு வருணைத்தேவ சிகாமணிச் சித்தவாரி
நத்துரு வலஞ்சூழ்ந்த நத்தினு ளுதித்தநல்ல
முத்துரு முத்தர்வேண்டின் முத்திநன் குதவும்போது
சத்துரு வாரும்பாசந் தனக்குமா தவர்க்குந்தானே. (௪)

வெண்பா.

தானே தனக்கிணையாய்த் தாவிலரு ணசலமாய்
ஞானமய மாகியே நன்றாகி - வானோருஞ்
சேவிக்குந் தேவ சிகாமணியை யேதரித்தா
லாவிக் கலங்கார மாம். (௫)

கலித்துறை.

ஆமாம்புன் மாயை யடைத்து நன்மாயை யதனுளொரு
பூமா நிலமென்று போட்டுர மாக்கிப் புரந்தனுவை
மாமா விதையென வைத்ததெல்லாம் வளமா மருணைப்
பாமாலைத் தேவ சிகாமணிச சோதி பயிரசெய்யவே. (௬)

அகவல்.

செய்யசிந் தூரச் செழுநதிக் கிடந்தங்
கோர்பதி னறுநான் குகத்தினும் விளைந்து
வுதயா சலமணி சிதையமேல் விளங்குந்
திருவரு ணசலத் தேவசி காமணி
யருண சலேசமி லருண சலேசன்
குருபரன் பால குமாரன் விருத்தனென்

* காரகம்=தீக்ஷாநுக்கிரகம்.

றொருவ னெய்து பருவம் போலப்
பொருந்து மிலய போகா திகாரமென்
றிருந்தியல் செய்தி யியம்பலோ வரிதே
யிருபரு வந்தன் னிடத்துநீங் காத
வொருபரு வத்தி னுதாசீ னரூபி
தாளெரு பொருளைத் தான்விரும் பாம
லான்மா விளங்கு மரும்பய னோக்கி
யானசு பாவத் தனைவரு முறங்கினுந்
தானுறங் காத தனிக்குடி வாழ்க்கையில்
ஞான மாத்திர மான போதும்
ஆக்கிய மாயா சத்தி வியத்தி
யோக்கியப் பார்வை யுயர்படைப் பாகவுஞ்
சேர்தரு மாயே யந்திதி யோக்கியப்
பார்வை தானே பகர்திதி யாகவுங்
கன்ம பரிபா கம்படச் செய்த
வன்மையி லாச்சங் கார மாகவுந்
திகழ்மலஞ் செலுத்த திரோத மாகவு
கிளர்கா ரகமனுக் கிரக மாகவு
நினைவா லைந்தொழி னிகழ்த்துந் திதியிற்
றேசிகர் யோசனை செய்யினுஞ் சிவத்துவ
மேசி லாதுறு மிலயத் தானத்
திலயா வத்தையி னிலங்கிய சோதியை
மலைவற வுரைப்பின் வானினும் பெரிதே
யின்மையின் மனோலய மெய்துவர்
சின்மயத் தோர்தினஞ் சிந்தனை செய்தே. (எ)

## விருத்தம்.

செய்யசீரரு ணாசலத்தேவசி காமணிச் செழுஞ்சோதி, யை
யனே செயுமைந் தொழிலையும் விளையாட்டென்ப ரறியாதார்,

கையதாகிய காரணங் கரணமோர் காரியம் பயனலவை யல்செய்தொழில் பரமகாரணர் செயார் பகர்வது பரிவன்றே. (அ)

வெண்பா.

அன்றன்று முந்நூற் றறுபத்து முச்சமயத்
தொன்றன்று வெவ்வே றுளமுத்தி - நன்றென்ற
சித்தாந்த மாமருணைத் தேவ சிகாமணிசெய்
சுத்தாத்து வைதச் சுகம். (கூ)

கலித்துறை.

சுகமெறிந்தேகுற மாதரு மாதவத் தோர்களுங்கண்
ணகமுறுந் தேவ சிகாமணி யாலங் கவணடுத்தே
தகவுறைந் தைவனங் காத்தரு ளசலச் சாரலிலே
யிகமுறு போகமு மின்பர போகமு மெய்துவரோ. (௧0)

அகவல்.

எய்தருங் காலாக் கினியெழுந் தடர்ந்த
செஞ்சுடர்ச் சுவாலை விஞ்சுகா லத்து
நரக முதலா நலம்பெறு சுவர்க்கத்
தளவுஞ் சராசர மடங்கலுந் தகிக்கும்
பிரதமப் பிரளயம் வரவருந் தோறும்
பிரமாப் படைப்பப் பிரமகற் பத்திற்
பிரமாண் டத்திலிவ் விருநிலப் பரப்பே
சத்துவ மாகத் தான்முன் பொருந்தலி
னன்னிலை பிளந்த பொன்னிற வண்டத்
திருகபா லங்களும் பரமாணு வாகப்
பிரமாண் டாதி பிராகிரு தாந்தத்
திருநான் கண்டமும் வருமுறை பெயர்ந்து
காரியத் தத்தங் காரணத் தொடுங்க
வுய்த்தசீ கண்ட வுருத்திர ருளால்

மத்திமப் பிரளய வகையிலிம் முறையே
யேழி லக்கத் திருபதி னுயிரம்
பிரம ரிறந்திட வருமா லையிலே
முறைபெறு மூர்த்தா மூர்த்த மாகியு
மறையாத் தந்திர மந்திர மாயும்
பரவும் பரம பரங்க ளாகியு
மேற்படு சுத்த மிச்சிர மசுத்தமென்
ருர்ப்புறு தத்துவ மாரு ருயுங்
காலாக் கினிமுதற் கருதுசி வாந்தம்
பேரா தடுக்கிய பிரக்கிரி யாண்டத்
திருவகை மாயே யங்களு மிடிந்து
காரியந் தத்தங் காரணத் தொடுங்க
வடுமகாப் பிரளய மாரணி முடிப்பச்
சுத்த காலந் தோன்றிய சமயத்
திலயப் பருவத் திதம்பெறு பதார்த்தப்
பாலனப் போகர் சில நோக்கி
லியல்சேர் நியாமிக விச்சா சத்தியு
ஞாபக மான ஞான சத்தியு
முத்தி யோகத் துயர்ந்த கிரியையு
மென்னு மூவகைச் சின்னம் படைத்து
நால்வகைப் பேருடை மேல்வகை யொருவ
னண்ணு மலையிற் கண்ணு ரமுதத்
தேவசி காமணித் தேசிகன்
மேவிய செய்கை விளையாட் டலவே. (கக)

## விருத்தம்.

வேதாகம ஞானவிபூதிம ஞேதீதம ஞேரத மாகிதி
மேதாதிக லாதிசு கோதய மேலான
நாதாதிய னுதிபராபர ஞானுதிய னுமய பூரண
நானுவித மான சதாசிவ நீள்சோதி

யாதாரமெ னுவரிதேடிய பாதாள மெலாமடி யாய்நெடி
தாகாயமெ லாமுடியாயய னோர வோர்
சீதாடவி சேரருணாசல மீதேவுறை தேவசிகாமணி
சீர்பாதம் விடாதவ ரேகதிசேர்வாரே. (கஉ)

வெண்பா.

சேரியலி னீளருணைத் தேவசிகா மணிசெய்
காரியமே லாகியசற் காரியமே - யோரில்
விருத்தி பரிணதி விவர்த்தா ரம்பத்திற்
பருத்திகலை பாறயிரொப பாம். (கங)

கலித்துறை.

பாமாலைத் தேவ சிகாமணி வாழும் பதியருணைத் [ய்த்
தூமாலை வெள்ளரு வித்தொங்கல் வாய்க்கண்ட சோலையிறபோ
தேமா மரமென்று வெவ்வேறு கண்டவர் செய்தியைப்போ
லாமாக மத்திற் குணகுணி வாதமென் றுவதுவே. (கச)

அகவல்.

ஆவது மழிவது மாக்குதற் கிடமாந்
தாவில் காரண தத்துவங் கடந்து
மும்முத் திரையுறு முத்தத் துவங்களி
னம்முத் திரைதிறந் தறிவ தாகியும்
வீசொளி பரந்து வியாபக மாய்நிறைந்
தீசர் கணயன கோசரங் கடந்து
மேழைய ரழைப்பினு மெதிர்மொழி கொடுத்தரு
ளருணு சலம்போற் கருணை லயநிதி
சீரரு ணாசலத் தேவ சிகாமணி
யியற்றுதற் கருத்தா வென்ப தாகலி
ணயர்ப்பருஞ் சத்திக ளாங்கர ணத்தா
லீறி லைந்தொழி லேவுங் கருத்தாத்
தூல மானவைந் தொழிலவா யோக்கியச்

சூக்கும மானவைந் தொழிலின் வழாத
விந்துவை நீங்கா விலய முத்தியும்
விந்துவை நீங்கிய விலயவி யத்தியும்
ஆந்தொழில் சாந்தி யாதிநாற் கலையினுஞ்
சாந்தி யதீதத் தனிக்கலை தனிலு
மிக்கலை யைந்தா வியல்பவை யாதியிற்
றக்க சிவமுதற் சாதாக் கியங்களு
மீசான னாதியைந் தெழின்மூர்த் திகளுஞ்
சேர்ந்த கலப்பின்மந் திரங்க ளாந்து
மீசானி யாதியைந் தியல்சத் திகளுமென்
றளவில்சத் திகளிவ் வாறுண் டாக
மூர்த்திக ளாந்து முடியைந் தாக
வைந்துசா தாக்கிய மைம்முக மாகப்
பிரம மைந்துந் திருமேனி யாக
அணுசதா சிவரீ சானரா தியர்கள்
பஞ்சவன் னத்துறும் பாவனை யதனு
லிந்திர சிலைபோ லுந்திரு மேனியன்
மறைப்பாற் கோம்பி வடிவென லன்றி
நிறத்தி னுனு நிகழ்பரஞ் சோதி
யிலக்குறு மிலய போகநெய் திரண்டென
வுலப்பி லாத வொருதனு மூர்த்தி
மதுவை யூட்டிப்பின் வல்வினை தீர்க்கும்
பண்டிதர் போலருள் கொண்ட சங்கற்பன்
சீமான் வைந்தவ தேகியென் றுரைக்குஞ்
சாமான்ய சைவர் சாராக் கடவுள்
இலகிய சுத்த வித்தியா புவனங்
குலவிய சத்த கோடி மந்திரத்து
ளியல்வச் சிராதிய ரிந்திரா தியர்க
ளுயர்நந் தியாதிய ருள்ளுமச் சூழ்ந்தே

யைந்து நான்கு மூன்று மெதிரா
யமர்ந்த மூவகை யாவர ணத்து
வீசுரத் தினிலனந் தேசரா தியர்சூ
ழாசி லாத்துவி தாவர ணத்துட்
டங்குசா தாக்கியந் தன்னிற் பிரம
மங்க முதலா வரணஞ் சூழத்
திருமுடி யைந்துந் திருமுக மைந்து
மருள்புரி யிதயமு மங்க மாகக்
கண்கள்மூ வைந்தொளிர் கன்னநாசி
யொண்களி வாய்கள்பத் துயர்தோள் கைவிர
லாரந்த னம்வயி றுந்தி யூருச்சா
னுசங்கந் தாள்பிரத் தியங்க மாக
வெண்மை பொன்மை கருமை செம்மையென்
றெண்மை நிறங்களு முள்ளசின் னங்களு
மாயுதா திகளுஞ் சாங்க மாக
வுடையா பரணாதி யுபாங்க மாக
நவசத் திகளு நலங்கொள்மூப் பானெண்
சிவசத் திகளுஞ் சிறந்துட னிருப்பப்
பொருவி லெண் சத்திகள் புகழாய்ப் பொலிய
வைந்து நீளமு மாறுன் னதமுஞ்
சிறுக னொன்குஞ் சிவப்போ ரேழுங்
கூர்நேர்மை யைந்துங் குழிவு மூன்று
மகல மிரண்டு மாயழ குடனே
யண்ண லருள்வடி வான மேனியி
லெண்ணான் கென்னு மிலக்கண மிலங்கி
வீறிலா துயர்ந்த விருதய முதலா
மாறுமந் திரங்க ளடங்கலும் புரக்கத்
தந்திரந் திகழ்சத் தியாதிசத் தியந்த
மந்திர சிங்கா சனத்துறை வள்ளல்

தத்துவ மூர்த்தி தனிப்பிர பாவமென்
றுத்தம மாக வுயர்திரு வுருவ
னரிபிர மாதியர்க் கரிய ராகிய
யோகா யோகிச் சுரர்க்குஞ் * சாமி
மோக நித்திரையின் முயன்றோர்த் தொடாம
லென்கையி லெடுத்த வீரொண் கோலால்
விழுப்பந் தோன்ற வெழுப்புந் தேசிகன்
ஞானஞா திருவென் றுனதே யல்லா
லேனை வடிவென் றிலாத சதாசிவன்
சுத்த மாயைத் துறையைக் கலக்கிச்
சத்த மருத்தந் தந்தரு ளீசன்
மன்னர் பாரமு மந்திரி தாங்கலி
னின்ன வாறுள வீசனு மிவ்வழி
நின்ன தாக நிகழ்த்துத லின்றேல்
மலமா யாதியில் மறைந்தோ ரவத்தையுஞ்
செறிவுறு தன்னையுஞ் சிவனையு
மறிவுறு மறிவெப் படியா வாரோ. (௧௫)

விருத்தம்.

ஆவாரக மலமாறு லணுவிபு வாமோ வாகாதே
யோவா தறிவை மறைத்தா லறிவற்றுயி ரொன்பதுமுண்டோ
தாவாஞா திருஞானம் ஞெத்தி தணந்திட லாகாதே
தேவா வருணைத் தேவசிகாமணி தேசிக தேர்வோர்க்கே.

வெண்பா.

கேவலான் மாவைமலங் கிட்டியதன் றேயருணைத்
தேவசிகா மணியைத் தீண்டியதோ - பாவங்
கடிதன்றே செம்பு களிம்புற்ற தல்லாற்
படிகங் கொளுமோ பழுது. (௧௭)

* சாமி=பிராகிருதம் என்பர் நச்சினார்க்கினியர். அது சிந்தாமணி யுரையிற் காண்க.

## கலித்துறை.

பழுதான கங்குலிற் பாயிருள் சீக்கும் பருதிவரும்
பொழுதா ரிருள்புல ராமலிரா து புகழருணைத்
தொழுதாதை தேவ சிகாமணிச் சூரியன் றோன்றமல
முழுதா ரிருள்புலர்ந் தம்போ ருகக்கண்முகிழ் விள்ளுமே. ()

## அகவல்.

விள்ளருங் கருணை வெள்ள மான
வுண்ணு முலைப்பெண் ணுமையொடு வதிந்து
மாறு துதவும் வசந்தத் தியாகர்
நினைவருள் புழுகு நெய்ப்பிர தாபர்
வடவா முகமும் வாரியின் மறையக்
காலாக் கினியுங் கதிரொளி மழுங்கப்
பகலோன் வடிவும் பகன்மதி யாகத்
தருபே ரொளிவிளங் கருணாச லேச
தேவ சிகாமணித் தேவ தேவே
சிவாக மத்துள்ளே தெரிவ தல்லா
லவாகமச் சமயிக ளறியாத தாகிக்
கேவலம் பஞ்சக் கிலேசத் தவிச்சை
போல்வி வேகத்திற் போகா தாகித்
திகழிதஞ் சேராச் செம்பிற் களிம்புங்
கந்தகஞ் சேர்ந்த கலங்கலு மணிசே
ருடலிற் பொல்லா விடமும் போல
பயில்சிவ சத்தி பதிந்த காலத்
துயிரொழி யாதுதா னொழிவ தாகிக்
கருவியிற் றீர்ந்திடு கட்பட லம்போற்
கிரியா தீக்கையிற் கிடைப்ப தல்லா
லொருஞா னத்து மொழியாத தாகித்
தாமங் காட்டுஞ் சுடர்போல் வாஞ்சைசெய்

போகங் காட்டப் பொலிவ தாகி
யொருசிவன் போல வுயர்சுதந் தரனே
பரதந் திரியம் படுத்துவ தாகி
யாசறு சகச ளுகிய வணுவைப்
பாசிய ளுக்கும் பசுத்துவ மாகிப்
பிணியொன் றில்லாப் பேரறி வோனே
யணுவென் ருக்கு மஞ்சன மாகி
யொழிவி லாதுயர்ந் தோங்குசிற் சத்தி
விழிதரும் போதி லொழிவ தாகித்
தாளெளன் ருகிச் சத்திகள் பலவா
யான்மாத் தோறு மாவ தாகிப்
பலவகைப் பட்ட * விருவகைச் சத்தி
யொருமல பதார்த்த மொழிப்பதோ வரிதே
தருவாகி சுவரி தான்கி ழரணியு
மிகுவா கீசுரர் மேலர ணியுமா
யோம்பழ வுயிராப் போம்புகை மலமாய்
விறகனல் போல மெய்யறி வுதிப்ப
முறுகக் கடைந்த வுறுதி நன்றே
யைவகைப் புகையெனு மலோபா திநீங்க
விவ்வகை நீசெய் திடா விடில்
மெய்வகை விறகனல் வெளிப்பட லுருதே. (கக)

## விருத்தம்.

உறவொடு பகையை யொழித்தரு ளுருவா
யோங்கிய குரவனு மரசு
மறலியு மெனவே மன்னுயிர்ப்பாவ மாற்றுதற்
கமைத்தரூ வரினும்

* இருவகைச்சத்தி=ஆவாரகசத்தி - அதோநியாமிகா சத்தி.

திறலுறுதேவ சிகாமணியாலே தீதெலாந்
தீர்ந்திடி லிங்கிதா
மறமுடை யரசன் செயலினுங் கொடிதா
மளப்பரு கிரயவேத னையே. (உo)

வெண்பா.

வேதனைசேருள்ளந்தான் மெய்யறியுமோவருணைச்
சேதனமாந்தேவ சிகாமணியைப் - போதநிறை
மாத்தவர்தம்பாசமெலா மாய்ந்தசமனுந்தத்தே
சாத்தமனங் காட்சிதரும். (உக)

கலித்துறை.

தருமாயையென்னுமிரண்டு மிப்பாசத்தளையுமுறு
கருமாயைவாழ்க்கையனுவ வைதானுங்கருணைபுரி
திருமாநிதியருணசலத்தேவ சிகாமணியு
மருமாவியாபகநித்தியமா மைந்தனுநிகளே. (உஉ)

அகவல்.

அனுதி பரானந் தப்பெருஞ் சோதியை
யாதி யோடந்தஞ் சோதனை குறித்தலின்
மாய வராகங் காயஞ் சேந்து
குமரன் வேலாற் சமர்செயு முன்னும்
புண்படச் சிவந்த பண்பு காட்ட
வந்த முருதே நொந்தவெள் ளன்னமு
மாவேள் கொடிச் செஞ் சேவலாகச்
செஞ்சுடர் விரிக்குந் திருவருண சலத்
தேவ சிகாமணிச் சீமா னருளிற்
பாரந் தாங்கிய சீரனந் தேசர்
சுவதாய்ப் போகந் துய்ப்பித் திடுதலின்
மோகினி யெனும்பே ராகிய மாயையிற்

பாய பாளையிற் பூவிரி தோன்றப்
பூவிரி பழுக்கா யாவிரிவது போல்
மிச்சிர மசுத்த மெனவிரி தத்துவஞ்
சாதா ரணமு மசாதா ரணமுஞ்
சாதா ரணசா தாரண வடிவும்
படைத்தினி தளிக்கும் பான்மைத் திதியி
லசாதா ரணத்தினு ளாந்திரி பந்தி
பௌவன போகஞ் செவ்விதி னுகர
வருபிர நட்ட வாகிய தேகியு
மருவப் பிராப்த வாகிய தேகியுந்
துலதே கங்கொடு துய்க்கச் சமைந்திட
*நற்றுவி பந்திவிஞ் ஞான கலரா
யற்று மலத்தோ டதீதத் திருப்பச்
சுவாப காலத்துமுன் சொல்லிய மூவகை
யனைவரும் பிரள யாகல ராகத்
தோற்ற மொடுக்கந் தோறுஞ் சுழன்று
மாயா பந்தத் தாயான் மாக்கள்
உறுதுயர் யாவையு மொழியுங் காலம்
பாசவாலிலை பழுத்த பக்குவ மாய்ச்
சொல்லுஞ் சொருபசத் துவ பரிணதியு
மாயையால் விதையில் வளர்ந்தென வெழுந்து
தோன்றிய சொருபாந் தரபரி ணதியுங்
கன்ம நாசமென் றிம்மூ வகையின்
பரிபா கமனுக் கிரக மாகவும்
பாக முறுவிப் பான்மூ வகைக்கு
மனுக்கிர கந்திரோ தான மாகவு
மரனறிந் தியற்றுவ தல்லா
லரிதரி தறிவ தான்மா திகளே. (உரு)

## விருத்தம்.

திகழுமலா மிந்திரிய மொன்றைச் செலுத்திடத் தேரினிரு
விகற்ப வித்தே, சேர்ந்தறிய ராகம் விகற்பமா யிச்சையைச்
செய்யமன மையஞ்செய்தே, திகழகங் காரமதி யேவவொன்
றறிவலென நிற்பவொன் றுறுபதார்த்த, நிச்சயஞ் செய்யமுக்
குணமீன்ற புத்தியி னிறைந்தசுக துக்கமோகம், புகல்நியதி நிய
மிக்க வோர்கால மேவப் புகழ்கலை புசிப்பதாக்கப், புத்தியிற்
போகம் புசிக்கவுன் முகனுய்ப் புகுந்தபுரு டன்றனக்கோர்,
மகனெனுஞ் சீவனிவ் வாறுமோ இனியான் மயங்கிப் புசிக்க
வூட்டி, வருதுயி லுறச்செயு மருணைவாழ் தெய்வ சிகாமணி
மறுதடுத்தே. (உச)

## வெண்பா.

அடுத்தருணைத் தேவ சிகாமணியா லன்றோ
வடுத்தனைநீத் தங்கனகம் வாய்ந்தேன் – றொடுத்த
வலகுடைய தங்கமினி யாகேனப் பாலு
மிலகுடைய தங்கமா வேன். (உரு)

## கலித்துறை.

வேனிலுந் தண்ணெனத் தென்றலு லாம்பொழின் மேகமென்
தேனின் மழைபெய் யருணைநந் தேவ சிகாமணிகண் [னத்
மீனினமேனி யனகனஞ் சிந்தனை வேறல்லவே
யீனினந்தேடுந் துனியின மாகும் மியாவர்க்குமே. (உசா)

## அகவல்.

யாவருங் காண வேபசுந் தோகை
காவின்மே லிருந்து கண்ணொளி பரப்பத்
தாதையே துதைந்து பேதைவண் டேதுங்
கூதள மலர்வெண் கோடெனவிசைப்ப
மூத்தள வருவி மத்தள முழங்கக்-

கின்னர மிதுனங்க ளின்னிசை பாட
வாயு வாய்துளை வேய்தா னிசைப்பக்
குருவரு ளுசலக் கொழுஞ்சுட ராடுந்
திருவரு ளுசலத் தேவ சிகாமணி
நிருமல வாழ்க்கை நீதோய்ந் தறியாக்
கருமல வாழ்க்கையெங் காதை கேட்டி.
புலக மேழு மலேகம தாக
விழுத்தகு மேரு வெழுத்தா ணியாகப்
பலநா ளெழுதினுந் தொலையாப் பாரத
மாயினுஞ் சிலசில தீயினுங் கொடியன
மாயா தேகத் தாயமுக் குணஞ்செய்
புத்தி யென்றது பத்தியொன் றறியா
தெட்டுக் கோணல் பட்டசக்கரத்
தாறுறாற் றீரா றுய பாவச்
சூறு வளியிற் சுழலுந் தோறுந்
தேடிய கன்மங் கோடி கோடி
சேரண வுலகிற் காரண மின்மையி
லாதி யோவன் றனுதி பந்த
மூலந்தபின் மாயையி லுறைந்துபக் குவமாய்ப
புலர்ந்தபி னணுக்கள் புந்தியின் மூளைத்து
மனவாக் காயத் தனுகினம் வளர்ந்தே
யக்கினிட் டோம மந்தணர் தாந்தஞ்
செய்தலிற் கன்மமென் றெய்து பெயர்த்தாகிச்
சஞ்சித முதலா விஞ்சு மூன்றி
லார்த்த மாய்வந் தடைந்த கன்மஞ்
சாதி யாயுப் போக மென்றுஞ்
சனகந் தாரகம் போக்கிய மென்று
மதிட்டந் திட்ட மனியத மென்றுஞ்
செம்பொ னிரும்பிற் செய்விலங் கிரண்டெனத்

தன்மா தன்ம மென்னுமீ ருருவாய்த்
துக்க மோகஞ் சுகமெனப் பலவாய்ப்
புக்குழிப் புக்குப் பொருந்து மாதலி
னிறந்திறந் துலகிற் பிறந்திடுந் தோறும்
பாபமீ டைப்பெரும் பாதகஞ் செய்தலி
னரக நூற்று நாற்பதிற் பயின்றபின்
விலங்குரு வாயித் தலந்தனிற் பிறந்துந்
தரும நியாயந் தப்பிய தீமைக்
கருமந் தன்னா லுருமீ ரையும்
வாக்கு நான்கால் வருபவந் தொடரப்
பறவை யாகும் பிறவியாயு
நாத்திகம் பேசலி னயனிலாப் பாலையிற்
பூத்துப் பயன்படாப் புன்மர மாயும்
பவமுறப் பிறக்குப் பயஞ்செய் திடலாற்
சருவமுன் டுழலுஞ் சாதி யாயும்
வெய்துறு பயஞ்செய்து மெய்யரு சாரஞ்
செய்துநாய் முதலாந் தீப்பிறப் பெய்தியுந்
தழைந்திடுங் கிரக தாரை காா
மிழைத்தலிற் பரதந் திரிய மெய்தியுங்
கருணையொன் றில்லாக் கருத்தொன் றுடைமையி
னிருணணி பயக்கு மிழிபிறப் பேய்ந்து
நிறைகுண மினமையி னேசத் தாற்றிரு
முறைகாந் திடுதலின் மூங்கை யாயுந்
துன்னெறி யாலுயிர்த் தொகைக்கிடர் செய்தலி
னன்னெறிக் கண்செவி நாசி குறைந்து
மலைவுறு கொலையா லற்பாயு வாயு
முலவாக் கால முழந்தன னெந்தாய்
வரமுறு நல்லுப வாசய மத்தாற்
பாதகண் டத்திப் பான்மையிற் பிறந்தேன்

பவமுறு பவ்வப் படுதிரைத் துயருழந்
தவமுறு மழுவத் தழுந்தி னேனை
யுபாய பதார்த்தமென் றோர்புணை யேற்றி
ஞானபா தத்தி னற்கரை யேற்றினை
பிறவா வாழ்க்கையும் பெற்றே
னறவா பேறினி யாவரு வனவே. (௨௭)

## விருத்தம்.

யாவரும் பரவு மேன்மை யெய்துமிவ் வருணைதானே
தேவரும் புகழ்செய் தேவ சிகாமணி சேருமூதூர்
தாவரு மகங்கா ராண்டத் தலேச்சுரத் தனிப்பேர்மன்னு
நீவரு நினைக்கமுத்தி நிகழ்மனோ புவனமாமே. (௨௮)

## வெண்பா.

மேவரிய வெண்மதியின் மேலேநன் னூலினுறத்
தேவ சிகாமணியைச் சேர்த்தணிந்தா - லோவாத
நல்லலங் காரமா நன்னிர் வெலாம்பகலா
மல்லலங் காரவரி தாம். (௨௯)

## கலித்துறை.

அரியா ருறையு மருணையுமென்னித யாம்புயமும்
பிரியா துறைதரு தேவ சிகாமணி பேதைமைபோற்
றெரியா தயர்த்த வடியார் தினந்தினஞ் செய்தபிழை
பரியா தறுத்துச் சுடுவதெல் லாமவர் பாசத்தையே. (௩௰)

## அகவல்.

பாசத் தளையாற் பலபகுப் பாதலிற்
காரா வினத்தினு வோரா வேறாய்
விசாதியிற் பிரிந்து சாதியி னீங்கிச்
சுகத பேதச் சொரூப நீங்காமையி
னன்னது போலு மன்னுயி ரொன்றே

யூகமனு பவத் தோரி ரண்டாகி
மூவகைச் சத்தியாய் நால்வகைக் குலமாய்ப்
பஞ்சவன் னங்கொளும் படிகம் போல
வாறத் துவாவின் வேறு வேறுருவா
யெழுவகைத் தோற்றத் தெண்வகை மலத்தொடு
நவமுறு கன்மத் தவமுற லொழித்துத்
தசகாரி யத்தின் வசமுற விருத்தி
வரமும் போகமு மருட்கையு முடைய
மேல்கீழ் நடுவென விளங்கவத் தையினி
லிருதை யாதிசாக் கிராதியைந் தின்கண்
டொருபிர மாதியிற் றேய்சுத்த வித்தையிற்
றிகழைந் தெழுத்தொடு சிவமந்திரஞ் சொல
விவ்வகை யின்றிச் செய்வகை மயங்கிப்
புருவ நடுமுதற் புகல்கீ ழவத்தையி
லிருவகை யிந்தியம் விடய மிருபது
முட்கரணங் களைந் தொடு நால்பத்து
மென்றையே ழுறல்சாக் கிரமென் றுரக
வாயு வசனாதி நால்வாயி லிருபது
மனாதி புருடன் வகையைந் துடனே
யையைந் துறல்சொப் பனமென் றுரகச்
செந்நெறிப் பிராணனுஞ் சித்தமும் புருடனுஞ்
சொன்ன மூன்றுறல் சுழுத்தி யாகப்
புருடன் பிராணனோர் துரிய மாகப்
புருடனி லிங்கம் புகச்சீ விப்பது
தெருளறு துரியா தீத மாக
வைவகை யாகு மவத்தை நீங்கிப்
பிரத்தியா காரா திபெறுசாக் ராதியி
லுன்மனாந்த மட் டேயர்தா னத்துச்
சாக்கிர சாக்கிரந் தான் முதலாகச்

சாக்கிர துரியந் தன்னின் மீதே
கால பரமதீ தம்பர தரிசனம்
விசுவக் கிராச முபசாந்தஞ் சிவ
தெரிசனஞ் சாயுச சியம் பன்னொன்று
மைமூன் றுந்துரி யாதீதத் துட்
சிவபோகப் பெருஞ் சிவசா திருச்சியச்
சிவசா யுச்சியச சிவானந்தந் தனை
சிறியேற் குதவும் பெருமை யாள
தகாத களங்கமுந் தமரு மில்லா
மகாமணி தேவ சிகாமணிச் சோதி
மருணைசஞ் செயு மருணை சலேச
விவவகை யின்றிச் செய்வகை யில்லாப்
டாலர் வாலீசா மாதர் போகியசொன்
றென்போ லியர்க்கு மிருங்கதி வேணடிச
சில * நிரப் பீச தீக்கையுஞ் செய்தி
பெரியோர் பெறும்பே றெளியோரு மெய்தலி
னின்பெருங் கருணை நீர்மை கண்
டன்பி லேனின் னடிபணிந் தேனே. (௩௧)

## விருத்தம்.

டணிந்திடுஞ் சிவபத்தர் பாலுறுபத்தியும் பவபீதியு
மணிந்தசின்னமுமெய்யடக்கமுமாகமத்திலமைத்தவா [வாய்த்
துணிந்தசெய்கையு முத்தியோடு தொடாச்சியும் பலசோணைவா
திணிந்துதேவ சிகாமணிக்குறு செய்தியைப்புகல் சின்னமே. ()

## வெண்பா.

சின்னமா மேசஞ் சிதந்தகித்த வித்தெனலா
யன்னதீக் காங்கத்தா காமியம்போந் - தென்னருணைச்

* நிர்ப்பீசம் = ஆசாரமில்லாதது என்றார் மறைஞானதேசிகர்.

சித்தேகத் தேவ சிகாமணிசெய் யார்த்த
மத்தேகத் தோடறுமெல் லாம். (௩௩)

கலித்துறை.

எல்லாருந் தீபங் கொழுந்துசெவ்வான மிளந்தளிர்மின்
மல்லார் மலர்நெய் வழிதேன் புகைமென் மகரந்தமாய்ச
சொல்லாருந் தேவ சிகாமணிசேரணைத் துருமமொன்று
பல்லார் விழிவண்டு சூழ்தர முத்திப் பலந்தருமே. (௩௪)

அகவல்.

தருகீழ முத்தித் தலைமை சான்ற
பிரகிரு தியில்வரு புவனம் டேசிற்
சேர்பெரும் பூதஞ் சிறந்ததன் மாத்திரை
வாரிந்திரிய மனமகங் கார
மதிகுண மான்மே லிருபுவ னத்துப்
பிசாசுட னிராக்கதர் டேரா வியக்கர்
யாழோ ரிந்திரன் சோமர் பிரசாபதி
யிவவெழு பேர்க்கு மொவ்வொன் ருக
வேறிய சித்தியு மிவர்கள் மேலே
திசைமுக னெண்ணெண் சித்தியும் படைட்டப்
பிரத்திய ரூபப் பிராகிரு தர்களாய்த்
தத்துவம் பத்தினுஞ் சார்தரு மனுக்களை
யான்ம வாதிய ராக நீக்கிப்
பவமில் புருடோ பரிச்சிவ வாதரிற்
சத்தினி பாதத் தன்மை நோக்கிச்
சிவசத் திகளாற் றீக்கை செய்தருளி
யுருமலக் குரம்பையை நிருமல மாக்கி
யிருசெவி யிடத்தி னிந்திராதியரு
மருவுறு துவக்கின் மாதரி தானு
மணிவிழிக் கிரவியும் வாயிடை வருணனுங்

கனிதரு நாசியிற் காசினிதானும்
வாக்கி லங்கியு மேற்கையிற் றிரனும்
பாத மாலும் பாயுமித் திரனு
முபத்தம் விதியு மோர்மன மதியு
முறைவ தாகி யிறைவது மன்றிச்
சிந்தனை செய்சிவ மந்திர மாக்கி
யைவகை யுயிரையு மெய்வகை நீக்கிப்
புத்திமுத் திபுமேல் வியத்தியு நோக்கி
மாலயன் பேறும் வறுமையின் வறிதா
வும்பர் வாழ்வுங் கும்பிவாழ் வாக
வராகத் தின்கி மானமுத் திகளும்
வாய்த்த கானிற் பேய்த்தே ராக
வளவில் ஞானத் தளவில்பூ ரணமா
மிருவகை யிருமூன் றின்ப வியோம
வொருபெருஞ் செல்வத் திருவர சாக்கிய
கருணை சலத்திரு வருணச லேச
மெய்வசி காமணித் தெய்வ சிகாமணி
தானு சாரமெய்ஞ் ஞானு சாரிய
காக்கையைத் தன்னிற மாக்குமே ருப்போ
லென்போ லியரையு நின்போ லாக்கலிற்
றொழற்குறும் விசிட்டாத் துவிதா தியர்போ
லழுக்கா றுறுநின் னருட்பெரு வாரி
வாழி வாழி வாழி
பாழிமா நிலத்துயிர் பலம்பெறப் பலவே. (ஙரு)

## விருத்தம்.

பலந்தரும்பெரி திகம்பரந்தன்னிற் பரத்தின்மேற் பரமான, புலந்தருந்தரு மிருவகைபபோசமும் போகத்தின்பொலிவான, நலந்தருந்தரு மிருவகை முத்தியு நல்கருணையின் மேவு, வலந்தரும் புகழ்த்தேவ சிகாமணி வான்மணி தராதொன்றே. ()

## பஃறொடைவெண்பா.

ஒன்றிய சந்தசுதா ளோர்கற்பங் கையாக
வென்றி வியாகரணமே யானனமாக வன்றியுஞ்
சோதிடங் கண்ணு நிருத்தஞ் செவியா
நன்றுடைய சிட்சையே நாசிவடிவாக
நின்றவா றங்கத்தி னீளவேதமா மேணி
கன்றரியவந்தக் கரணஞ் சிவாகம மாச
சென்றருணைத்தேவ சிகாமணிச சீவன் செலுத்தி •
மன்றிவரா துய்வ தருளால்- (௯எ)

## கலித்துறை.

அருளுண்டெனிலுண்டறங்களெல்லாமவவருளுநல்ல
பொருளுண்டெனிலுண்டுபோகியாக்கேயிவர்போகமல
விருளுண்டெனிலுண்டிங்கெல்லாம்வராமலிருத்துமொரு
தெருளுண்டெனிலுண்டுதேவசிகாமணிச்சிறகுருவே. (௯அ)

## அகவல்.

குருவேறு வேருய்க் குலவான்ம வாதந்
திருவருள் படைத்த சிவவாத மென்றிங்
கிருவகை வாதத் தொருமுதல் வாதத்து
வாகியம் வைதிக மாகிய விரண்டினி
லொருகுரு வுரைத்த வுலகா யதமு
மருகந்தரில் வழங் கார்கத நூலும்
பரமெனுஞ் சுகத பௌத்த நூலுமென்
றுனவாகிய ஞான மூன்று
மெய்திய விவேக வைதிக மார்க்கத்
தங்க முபாங்க முபவேத மாகிய
வங்கி யகலா வங்கவேதம் புகல்
வாய்த்த லௌகிகம் வைதிக சாத்திரம்
ஆததியான் மிகமதி மார்க்க மந்திரமென்

றைவகை யாகிய மெய்வகை நூல்களி
லிட்டமாகிய திட்ட பலஞ் செயும்
வைத்தியந் தண்டம் வழங்கு லௌகிகமுந்
திட்டா திட்டங் கிட்டிய பலங்கள்
பிரியா வேதக் கிரியா காண்டத்து
மீமாஞ்சை நியாய மிகுவை சேடிக
மென்னும் வைதிக மன்னு ஞானமு
மதிட்ட பலமெனு மான்ம ஞானத்து
வேதாந்த சாங்கிய மிகுபாதஞ் சலமென்
றளவிலாத் தியான்மிக ஞான முந்
தேர்ந்துற வல்ல சிவவாதத் திற்
சார்ந்துறு சாமா னிய சைவத்துட்
பாசு பதங்கா பாலமா விரதமற்
றுசிலாத வதிமார்க்க ஞானமு
மருளுஞ் சதாசிவ னதோ வத்திரமாந்
தற்புரு டாதியி னிற்பிரோ ரிக்கு
மனுதற் புருட ராதியோர் மொழிந்த
வதச் சுரோதசென் றுயமந்திரத் துட்
காருட மேதக்கிணம் வாமம் பூதமென்
றீரிரு சாத்திர மெனலா மிவற்றுட்
புருடமே பொருளாய்ப் புகன்று மந்திரமருந்
துறைசெய் காருட மென்றுள்ள ஞானமு
மகோரமே பிரம மாமப் பிரமமும்
யோகத் துறுமென் றோர்சத் துருசெய
மந்திரஞ் சொல்ல வல்லதக் கிணமும்
வாமமே பொருளென வழுத்தி வசியாதி
மாமந் திரம்புகல் வாமதந் திரமுஞ்
சத்தியோ சாதந் தானே பொருளென
வாய்க்கும்பூ தாதியை மந்திர மருந்தாற்

போக்குதல் புகன்ற பூதந் திரமு
மென்றருா னமுமிங் கொன்றிமே லுயர்ந்து
முன்னம் பராவச் சொன்ன சதாசிவ
ரந்தமி லருளான் முந்திய படைப்பிற்
சத்த பேதத் தன்மையிற் சமைந்தே
யூர்த்துவ முகந்தனில் வாய்த்தினி தான
சிவசம வேதச் சின்மய மொன்றே
சிவபே தங்களிற் செட்புமீ ரைந்தா
யுருத்திர பேதத் தோர்பதி னெட்டாய்க்
காமிகம் யோகசஞ் சிந்தியங் காரண
மசிதந் தீப்த மரிய சூக்கும
மப்பாற் சகசிர மஞ்சு மானோடு
சுப்பிர பேதம் விசயநிச் சுவாச
மருட்சுவா யம்புவ மனலம் வீரம்
வரமிகு ரௌரவ மகுடம் விமலஞ்
சந்திர ஞானந் தன்னொடு விம்பம்
புரோற்கீ தத்தொடு புகலும் லளிதஞ்
சித்த தந்திரந் திகழ்சந் தானம்
பகர்சரு வோத்தம் பாரமே சுரங்
கிரணம்வா துளமெனக் கிளக்குநா லேழு
போதவா கமங்கள் பாதநால் வகையாய்ச்
சுத்தமா யையில் வைத்த வாறே
யனந்தர்சீ கண்ட ரருளுமை கணபதி
குமர னரியயன் குலிசன் வானோர்
முனிவர் வழிவழி யினிதுணர்ந் ததன்பின்
முனிவர் வழியிம் முதுநிலத் துதிப்ப
வந்த ஞானமுமென் றிந்த ஞானங்க
ளவனி முதலா வஞ்சி ருதாந்தத்
தேற்றிய விளக்கு மேற்பருதியு மாய்ச்

செப்பிய சுத்த சிவமே லாதலிற்
றிருவரு ணசலத் தேவசி காமணி
குருவரு ணசலக் குளிர்நெடுஞ் சாரலிற்
கார்த்திகை மலர்ந்த காந்தட் பரப்புஞ்
சீர்த்திகொள் சிகரத் தீபமும் போலுங்
குன்றின் மேலிட்ட கொழுஞ் சுடர்
துன்றிய சுத்தாத் துவிதநங் குருவே. (௩௯)

## விருத்தம்.

குருமணி யருணைவாழுங் குருமணி குணமேயான
திருமணி, தேவதேவ சிகாமணி செம்பொற்றுளே
தருமணி வனசம்போலத் தான்குவி யாதுசான்றோர்
மருமணி மதியுள்ளேயு மலர்தரு வனசப்பூவே. (௪0)

## வெண்பா.

சீர்வாழி தெய்வ சிகாமணி சீரருணை
யூர்வாழி வாழி யுலகெல்லாங் - கார்வாழி
சித்தமிழ்த மானசிவ வாகமம் வாழிசெழு
முத்தமிழும் வாழி முறை.

நான்மணிமாலை முற்றியது.

---

## ஆக்கியோன்பெயர்.

அணிமாலைகாலை யணிமாலை நீர்கொண் டயனுடனே
பணிமாலையாளும் பரனருணேசன் பதத்தை நித்த
மெணிமாலைநீக்கிய தேவசிகாமணிக்கே தமிழ்நான்
மணிமாலைநூலை வணைந்தான் குமார மகாமுனியே.

---

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# சிற்குருமாலை.

வருவருதோற்றமெழுவகையாகவகுத்திடுநாற்
கருவருதுன்பக்கடனீந்துவங்கமதாமூலகிற்
கொருவருஞமுழுவைப்பாகர்பதாம்புயத்துண்மைபெறுந்
திருவருணசலத்தேவசிகாமணிச்சிற்குருவே. (க)

தருவருணத்துவமீதென்றுணர்ந்துபாசங்கடிந்து
குருவருணித்தமென்னெஞ்சேபிடித்தன்புகூரயன்மா
லிருவருநாடியண்ணுமலையானையிறைஞ்சுமனத்
திருவருணசலத்தேவசிகாமணிச்சிற்குருவே. (உ)

மருவருபூங்குழன்மாணர்களாசைவலைக்குளல
மருவருநின்கழற்போதண்ணியெய்துவதாநலமைந்
தருவரும்வேதமுனிவரும்போற்றத்தகுமருள்செய்
திருவருணசலத்தேவசிகாமணிசிற்குருவே. (ங)

அருவமிதாம்பரமானந்தச்சோதியனுதியிதென்
றுருவரிதாமெனயாவருங்காணவொண்ணுப்பொருளைப்
பருவமுணர்ந்துநன்மாணுக்கருக்கருள்பான்மைதங்குந்
திருவருணசலத்தேவசிகாமணிச்சிற்குருவே. (ச)

பருவழியாஞ்சிவபோகமெய்ஞ்ஞானப்பலனுயிர்க்குங்
கருவழியாமெனக்காணெஞ்சமேயொருகாலையினுந்
திருவழியாதுறுபேரின்பவாழ்வுதினங்கொடுக்குந்
திருவருணசலத்தேவசிகாமணிச்சிற்குருவே. (ரு)

கருவடிவாமயமாதியைமாசுகடிந்துமிக்காம்
பொருவறுகாஞ்சனமாக்குங்குளிகையைப்போன்றுலகி
னிருவகையாயதினன்மைப்பயனன்பர்க்கீட்டவந்த
திருவருணாசலத்தேவசிகாமணிச்சிற்குருவே. (௬

செருவுறுமாற்றலராயகங்காரசசினப்புலியை
வெருவுறமாய்த்துமெய்ப்போதக்கலையைவிளக்கியின்பச
சொருவவிவேகச்சுடர்மணியென்னுளத்துந்திருத்துந்
திருவருணாசலத்தேவசிகாமணிச்சிற்குருவே. (௭

திருகுறுமான்மனச்சேட்டைக்குரங்கைத்திருத்தியன்பி
னுருகுறுமாறுசெய்தொன்றாஞ்சிவானந்தத்தூறியதேன்
பருகுறவேயடியேற்குமினிதருள்பாலிக்குமெய்த்
திருவருணாசலத்தேவசிகாமணிச்சிற்குருவே. (௮

இருபதின்மேலிருநான்காகமங்களுமீரிரண்டு
சுருதியின்வாக்கியமுந்தவறாதுமெய்த்தொண்டர்மனத்
திருண்மலபாசத்தைநீக்கிமெய்ஞ்ஞானவியற்கைதருந்
திருவருணாசலத்தேவசிகாமணிசசிற்குருவே. (௯

கருவரியென்னுமிருள்போன்றவன்மனக்காட்டையெல்லாந்
துருவமதாக்கிப்புலக்குறும்பாகியதுட்டவிலங் [றேவ
கொருவரின்றாண்மலர்க்கேதொண்டுசெய்யவுமுண்மைபெற்
றிருவருணாசலத்தேவசிகாமணிச்சிற்குருவே. (௧0

முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

# திருக்கைலாசபரம்பரைத் திருவண்ணமலை ஆதீனத்தில் எழுந்தருளியிருந்த

# ஆசாரியர் திருநாமங்களும், பரிபூரணதசையடைந்த மாச நக்ஷத்திரங்களும்.

| | நாமம். | மாசம். | நக்ஷத்திரம். |
|---|---|---|---|
| க. | ஸ்ரீமத் தேவசிகாமணிதேசிகர் | ஆவணி | பூரட்டாதி |
| உ. | ,, தாண்டவராயதேசிகர் | தை | கார்த்திகை |
| ௩. | ,, வினைதீர்த்ததேசிகர் | மாசி | மூலம் |
| ௪. | ,, கனகசபாபதிதேசிகர் | புரட்டாசி | திருவாதிரை |
| ௫. | ,, வேலப்பதேசிகர் | ஐப்பசி | பூரம் |
| ௬. | ,, சுப்பிரமணியதேசிகர் | ,, | பூராடம் |

| | | | | |
|---|---|---|---|---|
| எ. | ,, | உருத்திரகோடிதேசிகர் | சித்திரை | மகம் |
| அ. | ,, | சதாசிவதேசிகர் | பங்குனி | உத்தரம் |
| கூ. | ,, | கண்ணப்பதேசிகர் | புரட்டாசி | கார்த்திகை |
| கo. | ,, | மாசிலாமணிதேசிகர் | கார்த்திகை | பரணி |
| கக. | ,, | சந்திரசேகரதேசிகர் | பங்குனி | மூலம் |
| கஉ. | ,, | குமாரகுருதேசிகர் | மார்கழி | கார்த்திகை |
| கங. | ,, | அம்பலவாணதேசிகர் | ஐப்பசி | சுவாதி |
| கச. | ,, | அருணகிரிதேசிகர் | ஆவணி | இரேவதி |
| கரு. | ,, | கந்தப்பதேசிகர் | கார்த்திகை | கார்த்திகை |
| கசு. | ,, | சுவாமிநாததேசிகர் | ஆவணி | மூலம் |
| கஎ. | ,, | நாகலிங்கதேசிகர் | ஐப்பசி | உத்தரம் |
| கஅ. | ,, | குமாரசுவாமிதேசிகா | தை | சித்திரை |
| ககூ. | ,, | திருச்சிற்றம்பலதேசிகர் | மார்கழி | திருவாதிரை |
| உo. | ,, | சிதம்பரநாததேசிகர் | கார்த்திகை | கார்த்திகை |
| உக. | ,, | சிவக்கொழுந்துதேசிகா | ஆவணி | விசாகம் |
| உஉ. | ,, | நமசிவாயதேசிகர் | ,, | உத்தரம் |
| உங. | ,, | அகத்தீச்சுரதேசிகர் | கார்த்திகை | இரேவதி |
| உச. | ,, | பொன்னம்பலதேசிகர் | வைகாசி | விசாகம் |
| உரு. | ,, | ஏகாம்பரதேசிகர் | தை | சதையம் |

| | | | | |
|---|---|---|---|---|
| ௨௬. | ,, | வைத்தியநாததேசிகர் | பங்குனி | பூரட்டாதி |
| ௨௭. | ,, | அண்ணாமலைத்தேசிகர் | தை | மூலம் |
| ௨௮. | ,, | ஞானப்பிரகாசதேசிகர் | சித்திரை | ஆயிலியம் |
| ௨௯. | ,, | ஆறுமுகதேசிகர் | ஐப்பசி | ஆயிலியம் |
| ௩௦. | ,, | திருச்சிற்றம்பலதேசிகர் | புரட்டாசி | மூலம் |
| ௩௧. | ,, | மருதநாயகதேசிகர் | மாசி | ரோகிணி |
| ௩௨. | ,, | தாண்டவராயதேசிகர் | மார்கழி | மகம் |
| ௩௩. | ,, | சிவசுப்பிரமணியதேசிகர் | ஐப்பசி | பூராடம் |
| ௩௪. | ,, | சாம்பசிவதேசிகர் | ஆடி | சுவாதி |
| ௩௫. | ,, | ஆறுமுகதேசிகர் | ஆவணி | பூரம் |
| ௩௬. | ,, | அருணாசலதேசிகர் | மாசி | விசாகம் |
| ௩௭. | ,, | பொன்னம்பலதேசிகர். | மார்கழி | பூராடம் |

## ஷை ஆதீனம்

## சிவஞானசித்தி வியாக்கியானஞ்செய்த

| | | | |
|---|---|---|---|
| யாழ்ப்பாணம் | ஸ்ரீ ஞானப்பிரகாசசுவாமிகள் | பங்குனி | பூசம் |

---